## 73. நெறியிது நில்லு

**பாகியார்த்தம் :** பராசரர், வியாசர் முதலிய மஹரிஷி களாற் கூறப்பட்ட ஸ்மிருதிகளாலும், ஆகமங்களாலும், இதிகாச புராணங்களாலு"ம், கூறப்பட்ட வருணாச்சிரம தரும விதிப்படி அற்பமேனு நழுவாது அம்மார்க்கத்தில் அனுசரித்து நடப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** தொண்ணூற்றாறு தத்துவங்களையும் விசாரித்துத் தள்ளிவிட்டு ஞான மார்க்கத்தை அறிந்து அப்பியாசிக்கு முடிவில் விளங்கும் பதியான வவ்விடமே பற்றி அவ்வழியே நாடோறும் பயின்று அதனவதிரூப அனுபவ மயமாய் நிற்கக் கடவோமாக.

## 74. நேயமு நேர்வாய்

**பாகியார்த்தம் :** யாராருக்கு எந்தெந்த முறைப்படி செய்ய வேண்டிய கடமைகளுண்டோ அவற்றைத் தவறாது முறையாக ஜாதி, குலம், தேசம், காலம் முதலியவைகளுக்குத் தகுந்தவாறு நேர்மையுடன் செய்யக் கடவாயாக.

**ஆந்தரார்த்தம் :** சங்கற்ப விகற்ப வடிவ அந்தக் கரணத்தை சங்கற்ப உற்பத்தி ஸ்தானத்தில் நிறுத்தி நெடுங் காலம் பழகி அப்படி நிலைத்த அவதியின் ரூப சாந்தியின் வடிவப் பழக்கத்தையே சகோதரனாகக் கொள்ளக் கடவோமாக.

## 75. நைதலு நன்றோர்

**பாகியார்த்தம் :** மனைவி முதலிய விஷய போக சுக சாதனங்களிலும் மற்றுமுள்ள போக சாமக்கிரியைகளிலும் மனதிற்குத் துக்கந்தோற்றி அதுகளிலுள்ள அற்ப அனித்திய விஷயங்களை அடிக்கடி விசாரிப்பது மிக்க நன்மை யென்றெண்ணக் கடவாயாக.

**ஆந்தரார்த்தம் :** அனித்தியவுலக விஷய போக சாதன வடிவ சரீரத்திலும், ஜனன மரணங்களிலும், பெண்களிடத்தும், அசுத்த அதிருஷ்டி வடிவமும் பொருந்திப் பெரும் பாரமாகத் தோற்றியபடி நைந்திருத்தலே ஆன்மாவை யடைவதற்கு நேர் சாதனமாகையால் அதை அடிக்கடி எண்ணி அப்படியிருத்தலே நன்றென்றறியக் கடவாயாக.

## 76. நொய்யறிவுடைமை

**பாகியார்த்தம் :** தார புத்திரராதியர்களைத் தனக்குள் ளடக்க வேண்டிலவர்களைச் சூட்சும புத்தியால் திருப்பி இசைவுடன் நல்வழிக்குக் கொண்டுவரும் புத்திசாலித் தனத்துடன் இல்லறத்தாரிருக்கக் கடவாராக.

**ஆந்தரார்த்தம் :** உலக முதல் மாயை வரை ஒன்றுக் கொன்று பெரிதும் சூட்சுமமும் வியாபகமுமாயிருக்கின்ற இவற்றிற் கெல்லாம் அதிஷ்டான வடிவமாயும், சாக்ஷி சொரூப மாயுஞ் சூட்சுமமாயுமிறா நின்ற வஸ்து எதுவோ அதில் அறிவை நிறுத்தி அப்பியாசித்து அவ்வறிவே வுடைத்தாயிருப்போமாக.

## 77. நோவிலை நுங்கு

**பாகியார்த்தம் :** ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம் முதலிய அதைரியச் செய்கைகளை மிகவும் அதிகமாக்காமலும் நிரம்பக் குறைத்து விடாமலும் அனுபவித்து வருவீர்களாயின் உங்களுக்கு ஓர் காலத்துமோர்வித நோயுமுண்டாகாதென்றறி வாயாக.

**ஆந்தரார்த்தம் :** ஸ்தூல சரீரத்துக்கு வாதம், பித்தம், கபம் என்னும் மூன்று வியாதிகளும் அவற்றினுள்ளீடான நாலாயிரத்து நானூற்று நாற்பத்து நாலு நோய்களும் இன்னும் மனோ வியாதியும் ஜென்ம வியாதியும், தங்குவதற்கிடமான

அவித்தையின் பரிணாமத்தை விலக்கி ஒரு நோயிமில்லாத ஆன்ம சொரூபத்தில் மனதைக் கறைத்து பிரஹ்ம வடிவத்தில் ஆழ்ந்திருப்போமாக.

## 78. நெளவுதனன்றேல்

**பாகியார்த்தம் :** தனக்குத் தாழ்ந்த கல்வி, செல்வம், நிலம், அந்தஸ்து முதலியவர்களைக் கண்டால் சிரித்து அவர்களை ஏளனஞ் செய்யாதிருத்தலே நன்மை யென்றறியக் கடவாயாக.

**ஆந்தரார்த்தம் :** ஞானானுபூதி இரகசியார்த்தங்களை ஞானிகளிடங் கேட்டுத் தெரிந்து அதன் பலத்தால் அஞ்ஞான அம்சபூத விஷய ஞானேந்திரிய, கருமேந்திரிய, அந்தக்கரண, பிராண பஞ்சக முதலிய தத்துவங்களைப் பார்த்து இனி வுங்களாலென்னைத் தாக்குதல் முடியாதென்று தன்னிலை யினின்று கொண்டு அற்புதமாகச் சிரித்துக் கொண்டிருப்பதே மிகுந்த நன்மையென்றறியக் கடவாயாக.

## 79. பக்குவம் பார்க்கும்

**பாகியார்த்தம் :** நமது சரீரம் நம்மை விட்டு நீங்காதென்று நிச்சயித்திருக்கும்போது எவ்வளவு காலம் வரை நியதியின் பக்குவமிருக்கின்றதோ அதையே சரீரம் எதிர்பார்த்துக் கொண்டிருக்குமென்றறிவாயாக.

**ஆந்தரார்த்தம் :** எல்லாங் கடந்த இறைவனிடத்து எப்போதுஞ் சம்பந்தித்துக் கொண்டிறா நின்ற மாயையின் கால சக்தியின் சங்கற்ப வடிவ ஜகத் ரக்ஷக ஈஸ்வரனது கிருபை சர்வ ஜீவர்களிடத்திலுமிருந்தாலும் ஞான முதயமாவதற்கு முதலில் சரீரம், உலகம் இவைகளில் வெறுப்பு, பாப புண்ணிய சமத்துவம், மலங்தின் பிறிவு, அருட் சேர்க்கை, இவ்வளவுங் கூடிய பக்குவ காலத்தை எதிர் பார்க்குமென்றறியக் கடவாயாக.

## 80. பாவனம் பதியேல்

**பாகியார்த்தம் :** அன்னியருடைய ஸ்தீரிகளைக் கண்டு மனதில் கூட இச்சையின் பாவனை செய்தலும், மாற்றாரைக் கெடுக்க வேண்டுமென்னும் மனோ பாவனையும் அற்றிருக்கக் கடவீராக.

**ஆந்தரார்த்தம் :** உலகம், சரீரம், ஜீவன், அவித்தை, நித்திய வனித்தியம் முதலிய பாவனைகளையும் சகுணம், நிர்க் குணம், சஞ்சலம் முதலிய பாவனைகளையும் சமாதி, நிஷ்டை, ஜீவன் முக்தி முதலிய பாவனைகளையும் விட்டொழித்து அபாவனையின் வடிவத்தைத் தன்னுள் கொள்ளக் கடவாயாக.

## 81. பித்தனுமாவார்

**பாகியார்த்தம் :** லௌகீக உலக விஷயமும், வைதீக சாஸ்திர விஷயமும், யதார்த்தமான அளவிறந்த கல்வி விஷயமும், கற்றுணர்ந்தவர்கள் தனது சாமர்த்தியத்தை டம்ப நிமித்தமாக வெளிக்குக் காண்பிக்காமல் பித்தனைப் போன்றிருப்பாறென வறிக.

**ஆந்தரார்த்தம் :** சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, அசம் சத்தி, பதார்த்த பாவனை, துரியம், துரியாதீதம் முதலிய இரகசிய விடயங்களைத் தெரிந்து கொண்ட ஞானிகள் உலகத்தார் தனது உண்மை நிலையை யறிந்து கொண்டால் விவகார மதிகமுண்டாய் ஆத்மசுகங் குறைவு படுமென்று ஒன்றுந் தெரியாத அறிவில்லாதவர்போல் உலகத்திற் சஞ்சரிப்பாறெனவறிக.

## 82. பீடுதல் பிசகு

**பாகியார்த்தம் :** கிரஹஸ்தர்கள் தனது குடும்ப நிலை, திரவிய நிலை, கீர்த்தி நிலை முதலிய நிலைகளை இருந்த

நிலைமையிலிருந்து மேலாக்கு முயற்சி நழுவிக் குறைவுபடு முயற்சியை விட்டுவிடாதிருத்தல் பெரிய தப்பிதமென்றறியக் கடவாயாக.

**ஆந்தரார்த்தம் :** ஜெகத்தில் மாதர்கள் அடிக்கடி புத்திரர் களைப் பெருதல்போல ஞானிகளும் அடிக்கடி தன்னிடத்தி னின்று சங்கற்ப விகற்ப மாயா மயக்க பிரபஞ்ச புத்திரர்களை உண்டாக்குகிறார்கள். முதலில் ஸ்திரீ புத்திரனுண்டாக்குவதற்கு முக்கிய காரணம் புருஷ சம்பந்தமே. இங்கும் உலக புத்திரனுண்டாவதற்குக் காரணம் மாயையின் சேர்க்கையே. ஆதலால், அச்சேர்க்கையை விட்டொழித்து அதனப்பாற் சென்று அங்கு நின்றுங் கீழிறங்குவது பெரிய தப்பாதலால் ஆங்கே நிலைத்திருப்பாயாக.

## 83. புருவத்தினடுவுள்

**பாகியார்த்தம் :** சர்வ மனிதர்கட்கும் அறிவிருக்கும் ஸ்தானம் நெற்றியின் கீழ்ப்பாகத்திலுள்ள சுழுமுனா நாடி யாதலால் இரண்டு புருவ மத்திய ஸ்தான இடத்தில் மனதை வைத்திருக்கக் கடவாயாக.

**ஆந்தரார்த்தம் :** நாடி எழுபத்தீராயிரம், வியாதி நாலாயிரத்து நானூற்று நாற்பத்து நான்கு, வாயு பத்து, இன்னுமற்றுமுள்ள தத்துவங்களும் நிறைந்திருக்கப்பட்ட ஸ்தூல சரீரத்தின் இரண்டு காற் பெருவிரலினின்று ஆரம்பித்து இரண்டும் மூலாதாரத்திற் சந்தித்து முதுகு மார்க்கமாகப் பிடரி வழிக்குச் சென்று பிரமரந்திரம் போய் மூக்கு நுனி வரையிற் படர்ந்திருக்கு நாடி சுழு முனையாம். இவற்றின் முக்கிய ஸ்தானம் நெற்றியிலுள்ள இரண்டு புருவத்திற்கு மத்தியமான உள்ளே சென்று ஆங்கிருப்பதுவே கேசரி முத்திரையின் ஓர்வித லக்ஷணமாம் என்றறியக் கடவாயாக.

## 84. பூரகம் புரிவீர்

**பாகியார்த்தம் :** இயம நியமமிரண்டுந் தாண்டிய பின் ஏதாவதோ ராதனத்திருந்து பிராணாயாமத்தினொரு கூறாகிய பூரகத்தைக் கும்பக வலியாற் சித்தி செய்து கொண்டு அங்ஙனேயிருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** சங்கற்பமென்னும் பூரகம், விகற்ப மென்னு மிரேசகம், இரண்டையு மடக்கலென்னுங் கும்பகம், இவைகளில் பூரகத்தை முதலிலடக்கித் தானே தானாயிருப்பீர்களாக.

## 85. பெட்புடன் பேரேல்

**பாகியார்த்தம் :** யாருனக்கு என்ன தீங்கு செய்யினும் முன்னிருந்த நிலைமைக்கு வழுவாது திடபுத்தியுடனிருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** ஆன்ம சொரூப சமஸ்கார வடிவ சைதன்ய அனுபூத அனுபவ திடத்தால் தன்னைப் பெற்று அந்த திடத்திலேயே இருந்து கொண்டு கீழிறங்காதிருப்பாயாக.

## 86. பேசுவதிலையாம்

**பாகியார்த்தம் :** தேவாலயங்களுக்குச் சென்று ஆங்கு ஸ்தாபித்துள்ள விக்கிரக ரூப தேவர்கள் நமக்குப் பூர்ண பக்குவம் வரும் வரை நம்மோடு பேசுவதின்றென்றறியக் கடவீர்களாக.

**ஆந்தரார்த்தம் :** சர்வ கரணங்களும், தத்துவங்களும், உபசாந்தத்தினுபசமத்தால் அடங்கி ஆன்மாவினதியற்புத வடிவில் நின்று கொண்டு இருக்கப்பட்ட பிரஹ்ம ஞானிகள் வேறாக வெளியினின்று பேசாததோடு ஆத்மாவாகிய நாம் பேசுவதில்லை யென்றுட் கொள்வார்களென்றறிக.

## 87. பையுளம் பாரேல்

**பாகியார்த்தம் :** கெட்ட மனதுடையவர்கள், காணா தொன்று கூறுபவர்கள், கருத்துமாறி நடப்போர், இன்னோர் களது இசைந்த பழக்கத்தை உளத்திலுங் கருதாதிருப்பீர்களாக.

**ஆந்தரார்த்தம் :** ஞானேந்திரிய, கருமேந்திரிய, அந்தக் கரண சர்வ தத்துவ விஷப்பைகளோடு கூடிய மனதென்னுஞ் சர்ப்பத்தின் விரிந்த சங்கற்ப விகற்ப மென்னும் படத்தை ஞானாஞ்சன மென்னும் அமிர்த மூலிகையின் வேறால் அதட்டி அப்படத்தை யடங்கச் செய்து அவ்வுளத்தைத் தானாக்கி ஆங்கு நின்று பிரபஞ்சத்தைப் பார்க்கக் கடவாயாக.

## 88. பொய்யகமின்றேல்

**பாகியார்த்தம் :** உலக விஷயங்களெதிலும் பொய் கூறா திருத்தல் மிகுந்த நலம். அதிலும் ஒருவருக்கும் கெடுதி யுண்டாக்காத பொய்யொழித்து மற்றவைகளையாவது கூறி அங்ஙனேயிருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** எதார்த்த சைதன்ய ஆன்மாவின் கற்பித வடிவின் சூனிய தேஜோரூப ஜடப் பரிணாமமான மனது எக்காலத்து மெச்சமயத்து யாரிடத்தும் இல்லவேயில்லை யென்றுறுதி கொண்டு அதனதிஷ்டான வடிவை பிரஹ்ம சொரூபத்தில் கறைத்திருக்கக் கடவீர்களாக.

## 89. போதமும் பொய்யாம்

**பாகியார்த்தம் :** எவ்வளவோ பெரிய உலக விஷய ஞானம் பயின்றாலும் அதுவுமோர் க்ஷண நேரத்துள் மாறி மற்றொன்று தோன்றி விடுகின்றபடியால் அவ்விஷயாகார ஞானம் பொய் யென்றறியக் கடவாயாக.

**ஆந்தரார்த்தம் :** மூன்று முத்திரைகளினாரம்ப வடிவமா யும், யதார்த்த ஞானாகார விருத்தியாயும், ஏகாக்கிரமாயும், சமாதி ரூபமாயும், இருக்கப்பட்ட யாதொரு ஞானமுண்டோ அதுவுமது முடிந்த காலத்தில் மித்தையென்றெண்ணக் கடவாயாக.

## 90. பௌதிகம் பாரேல்

**பாகியார்த்தம் :** எடுத்த காரியத்தை முடிக்க வேண்டு மென்றாரம்பித்தவர்கள் பிராரத்த மெப்படியோ வென் றாலோசியாமல் பிரபல முயற்சியை விடாதிருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** ஆதியாத்மீகம், ஆதி தெய்வீகம், ஆதி பௌதீகம் என்னும் தாபத்திரய துக்கங்களை ஞானானுபூதி யினால் வென்று அவற்றை யெப்போதும் பாராதிருப்பாயாக.

## 91. மலங்கெட வருவார்

**பாகியார்த்தம் :** சரீரத்திலுள்ள அழுக்குள் நீங்க நீங்கச் சரீரம் பளபளப்பானவுடன் உள்ளிருக்கும் மலத்தையுங் கெடுக்கு மிச்சையான தேவனானவர் பிரசன்ன மாவாறென்றறிக.

**ஆந்தரார்த்தம் :** ஆணவ மலம், மாயா மலம், கன்மமலம் என்னு மும்முறை மலமும், புருஷப் பிரயத்தனத்தால் நசிக்கச் செய்து சத்தினி பாத பரிபாக காலம் வந்தவுடன் ஞான வடிவை யறிவிக்க ஞானானந்த சொரூப ஆசாரியர் வருவாரென்றறியக் கடவீராக.

## 92. மாதவ மறிவாய்

**பாகியார்த்தம் :** ஆசைவிலக்குவதற்காரம்ப வாதாரமான சாந்தராயண கிருச்சிர ஏகாதசி சிவராத்திரி முதலிய அரிய தபங்களையும் ஈஸ்வர நாமோச்சாரணையையுமியற்றி தவத்தினுண்மையை யறிந்து கொள்வாயாக.

**ஆந்தரார்த்தம்.** அந்தக்கரண சம்பந்த சிதாபாசனையும் அவித்யாசம் பந்த ஜீவனையும் மாயாசம் பந்த ஈஸ்வரனையும் அகற்றி நம்முடைய யதார்த்த சொரூபத்தையறிய அவாக் கொண்டு சமாதி நிஷ்டையிலும் மஹா தவத்தையியற்றி அது தானாக வருவாயாக.

## 93. மின்னிலை யுலகம்

**பாகியார்த்தம் :** உலக லெளகீக குடும்ப நிலையில் மேலே சென்று மெதுவாக ஆங்கேயிருந்து கொள்வீர்களாக.

**ஆந்தரார்த்தம் :** மாயாகற்பித இச்சகத்துத் தோன்றி மறைந்து போகுஞ் சுபாவமாயிருக்குந் தன்மை வாய்ந்திருந்த லால் மேகத்தின் சம்பந்த மின்னிலையொத்து இவ்வுலகமிருக்கு மென்றறிவாயாக. அல்லது சமாதியப்பியாசத்திற்கு முன் சாக்ஷி தரிசனத்திற்குப் பின் தோன்றக் கூடிய ஓர்வித மின் போன்ற பிரகாசத்தை உலகமென்றெண்ணக் கடவாயாக.

## 94. மீமிசை மின்னும்

**பாகியார்த்தம் :** பார்வைக்கு மிகவும் ரம்மியமாகத் தோற்றுகின்ற ஆடை, ஆபரணம், ரவிக்கை, முகம், மற்றுமுள்ள ஸ்திரீகளைக் கண்டு மயங்கிவிடாதிருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** அகங்கார வடிவ ஜெகத்தையகற்றி அப்பால் ஞானாப்பியாச முடிவில் பிராண சக்தி பிரமரந்திரத்தில் நிலைத்து அப்பியாசிக்கு முடிவில் விளங்கும் ஓர்வித தேஜோ ரூபத்தை யதார்த்த வடிவ அத்தியாசமாக வெண்ணக் கடவாயாக.

## 95. முழுதற முதலார்

**பாகியார்த்தம் :** குடும்ப முதலை இருந்த நிலமைக்குக் குறைத்து விடாததான தருமங்களியற்றி எப்போது முதலில் லெளகீகரிடத்து மேன்மை பெற்றுருக்கக் கடவாயாக.

**ஆந்தரார்த்தம் :** ஆகாமிய சஞ்சிதப் பிராரத்த வினைகளும் ஸ்தூல சூட்சும காரண சரீரங்களும், சாக்கிர சொப்பன சுழுத்தி அவஸ்தைகளும், பஞ்ச கோசங்களும், எல்லாவிடங்களுங் கழிந்த பின்பு அப்பால் நின்றவிடம் ஜெகத்திற்கு முதல் வஸ்து வானபடியால் ஆங்கே சென்றிருக்கக் கடவாயாக.

## 96. மூகர்களாவார்

**பாகியார்த்தம் :** நம்மிடத்தில் வருகிற யாரையும் நம்பாது நின்ற நம்மைக் கண்டு பயந்து நிற்பாரிடம் ஒன்றுமறியாதவன் போலிருக்கக் கடவாயாக.

**ஆந்தரார்த்தம் :** சுத்த சைதன்ய வஸ்துவை யதார்த்த மாயுணர்ந்த விவேவிகள் ஜகத் மாந்தர்கள் தன்னிலைமை யறியாவண்ணம் ஒன்றுமறியாத மூடர்களைப் போலத் தோற்றுவாறென்றறிக.

## 97. மேலிதலு மெய்யார்

**பாகியார்த்தம் :** ஓர் மாதத்திலிரண்டு தடவைக்கு மேல் மாதர்களைப் புணருவீர்களாயின் ஸ்தூல சரீரம் மெலிந்து எலும்பு வெளிக் காணுமாகையால் அவ்விஷயத்தி லெல்லோரு மதி ஜாக்கிரதையாயிருக்கக் கடவீராக.

**ஆந்தரார்த்தம் :** சாந்த வடிவ சற்குரு நாட்டத்தின் பலத்தால் மனாதிகரணங்களை மெலியச் செய்து நாசமாக்கி நின்றவிடமே சுசாதி விசாதி சுவகத பேதரகித அவாங் மனோவகோசர பிரஹ்ம வஸ்துவாகுமவ்விடத்தே நிலைத்திருப்பீர்களாக.

## 98. மேலற மேலோர்

**பாகியார்த்தம் :** யாரைக் கண்டாலும் நம்மைக் காட்டிலும் உயர்ந்த தெரிய நிலையுடையோரல்லவென்னு மகங்காரத்தைத்

தொலைத்து எல்லாரிலுந் தன்னைத் தாழ்ந்தவனாக நினைத்தல் வேண்டுமென்ற றிவாயாக.

**ஆந்தரார்த்தம் :** வெளிக்குப் பெரிதாகவும் மேலாகவுந் தோன்றக்கூடிய மனதிற்கு மேலான மாயை அதன் மேலப்பா லுள்ள அறிவால் அறச் செய்து அம்மாயையின் மீதேறி நின்று கொண்டு அப்பாலுள்ள இரகசிய நுட்பங்களை யுணருவீர்களாக.

## 99. மையிட மாறு

**பாகியார்த்தம் :** நல்ல சுபாவத்தையுடையோர்கள் கருத்த நிலங்களிலும் கருத்த மனமுடையவர் வசிக்குமிடங்களிலும் கருத்தரிக்குங் காரண பீஜ வடிவ அன்னிய மாதர்களிருக்கு மிடங்களிலும் வசிக்காது மாறியிருக்கக் கடவீராக.

**ஆந்தரார்த்தம் :** சோம்பல், மயக்கம், நித்திரை, பயம், மைதுனம் இவைகளின் வடிவ தமோ குண வடிவார்த்த பிரதான அவித்தையினாரம்ப மனோகற்பித அவ்யக்கத்தின் லக்ஷண மாயை யினின்று விஷயஞ் செய்த எவரும் அவர்களிடங்களு மாறு மெனவறிக.

## 100. மொக்குளி னுறவோர்

**பாகியார்த்தம் :** திரிவித கரணத்திலும் தெய்வங்களை வழிபடுந் தன்மை வாய்ந்தவர்களினுறவை யெப்போது நீங்காதிருப்பீராக.

**ஆந்தரார்த்தம் :** பஞ்சீகரண பஞ்சபூத விகார வடிவ அன்ன மய கோசத்தினடு மத்தியிலுள்ள இருதயத்திலிருக்கப் பட்ட சமுதாய நாடிகளினாரம்பத்தில் வாழைப்பூப்போல் கீழ் முகமாக ஓர் புஷ்பம் தொங்குகிறது. அவ்வுள்ளே யிடமாகப் பொருந்தி யிருக்கப்பட்ட ஜீவாத்மா அப்புஷ்பத்தை ரேசக, பூரக, கும்பக, பிரணாயாமத்தாலும், லம்பிகாயோகத்தாலும்,

மூலாதாரத்தி லுள்ள குண்டலி சக்தியை யெழுப்பச் செய்து அப்புஷ்பத்தில் மோதி மேல் முகமாக அப்புஷ்பங்கிளம்ப அலர்ந்து அதிலுள்ள ஆன்மா அதினின்று கிளம்பி மேல் நாடி சுழுமுனை வழியாகப் பிரமரந்திரஞ் சென்று அங்குள்ள அமிர்த கலசத்தை யுடைத்து அங்கு நின்ற அஃதொழுகி இப்புஷ்பத்திற்றாக்க உடல் குளுர்ந்து பணங்குளிர்ந்து பசி தோன்றாதிருக்குமவற்றின் சிநேகிதத்தை நீ வேண்டுவாயாக.

## 101. மோக்கமு முன்னேல்

**பாகியார்த்தம் :** அனித்திய விஷய சுகங்களையே நாடி அது மாறாதிருக்கு முறையை மனதினினைந் திருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** சாதன சதுட்டய சம்பத்தியை அவதி வரைப் பெற்று தீவிர மோக்ஷ இச்சாபூர்ண ஆசார்ய அனுக்கிரக சமாதி லக்ஷண நிஷ்டையானந்த ஜீவன் முத்தியை யடைந்த வரெவரும் பின்பு முத்தியை யடைய வேண்டுமென்னும் பிராந்தியை ஒழிக்கக் கடவாராக.

## 102. மௌனமு மாறும்

**பாகியார்த்தம் :** யாருடனாவதுகோபங் கொண்டு இனிப் பேசுகிற தில்லையென்னும் விரதம் பூண்டால் பேசுகிற காலம் வருமாகையால் முதலிலேயே அவ்விரதம் பூணாதிருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** வாக்கு மவுனம், கரண மவுனம், காட்ட மவுனம், மஹா மவுனம் என்னுமவுன நிலைகளு மாறுமாகை யால் அவற்றையுந் தாண்டிய விடத்திலிருப்பாயாக.

## 103. வந்திடுந் தடைகள்

**பாகியார்த்தம் :** ஏதாவது சுப காரியங்கள் செய்யப் புகு வோமானால் இடையிலளவிறந்த தடைகளுண்டாகுமாதலால் அவற்றின் மயங்காதிருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** பஞ்ச கோசங்களையுஞ் சூனியத்தையுந் தாண்டியப்பாற் சென்று ஆன்மாகார விருத்தி ரூப சமாதி அப்பியாசிக்கு மளவில் லயம், விக்ஷேபம், கஷாயம், ரஜாஸ்வரத மென்னுந் தடைகளும், அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம், பூதம், பவிஷியம், வர்த்தமானம் முதலிய பிரபந்தங் களும் வந்து பொருந்துமென்றறிவாயாக.

## 104. வாதனை வசத்துறேல்

**பாகியார்த்தம் :** மனதிற்குத் துன்பம் தோற்றுகிற எவ்வித காரியங்களின் வசத்திலும் நில்லாதிருப்பீர்களாக.

**ஆந்தரார்த்தம் :** எண்பத்து நான்கு லக்ஷ யோனி ஜா களில் அநேக தரஞ் சனித்து நின்ற பழக்க வாசனையினால் பற்றப் பற்றச் சுத்தா சுத்த வாசனைகள் வரும். அவற்றின் வசப்பட்டு தன்னை மறந்து அதின்வழி பொருந்தாதிருப்பாயாக.

## 105. விந்துற விமலம்

**பாகியார்த்தம் :** அன்னத்தின் பரிபாக இரத்தம் பெருக அவற்றி னதிஷ்டான வடிவ இந்திரியத்தின் சேர்க்கையினால் காய சித்தி உண்டாக மனது எப்போதும் பரிசுத்த நிலையை யடையுமென் றறிவாயாக.

**ஆந்தரார்த்தம் :** பிரமநாதத்துக்குக் கீழான விந்துவின் சொரூபத்தை யடையப் பரிசுத்தமான பிரஹ்ம சைதன்ய நிலைமை வந்து விடுமென்ற றிவாயாக.

## 106. வீணற வித்தேர்

**பாகியார்த்தம் :** ஜகத் மாயையின் வடிவ அன்னிய மாதர் களைக் கண்டால் கலங்குகின்ற மனோ இந்திரியத்தை யடக்கி வித்துவின் தன்மை பெற்ற சுழுமுனா நாடியில மர்ந்திருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** பயனற்ற செய்கைகளில் மனஞ் செல்லாது நின்ற அவசரத்திலுண்டாகும் மாயை யென்னுமோர் சக்தி ஆன்மாகார விருத்தி ஞானத்தால் நசித்துப் போக அவற்றிற்கும் பீஜமாயிருந்த நித்திய வடிவ பர வஸ்துவிலேறி யங்ஙனே யிருப்பீராக.

## 107. உன்னிட முன்னில்

**பாகியார்த்தம் :** உன்னுடைய நில முதலிய இடங் களையே உன்னி அதினிடத்தே யன்பு செலுத்தி அதையுழுது பயிர செய்து அதிலுண்டாகும் பலனைக் கொண்டு நீ ஜீவித்து வருவாயாக.

**ஆந்தரார்த்தம் :** மாயையின் கற்பித ஜீவாத்ம சொரூபத்தைத் தானே யறிந்தவுன்னில் வேற்றிடங் கண்டு தன்னிலே தன்னைக் காண்பாயாக.

## 108. ஊழியுந் தூர்ப்பாய்

**பாகியார்த்தம் :** நான்கு யுக வூழி, பிரம வூழி, மற்றுமுள்ள எவ்வித வூழிகளையும் மந்திர மணி ஔஷத காயசித்தியாற் ஜெயித்திருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** மூவகைச் சரீரத்தை நம்பி அதே நாமென்று நாமே நிச்சயித்த இத்தூலங்கள் ஓர் காலத்தழியு மென்பதால் வூழியின் உச்சியான பரம வஸ்துவினுண்மை நிலையைப் பற்றி அங்ஙனே யேறியிருப்பாயாக.

## 109. வெண்குண மீறும்

**பாகியார்த்தம் :** வெள்ளைநிற வஸ்திரம், வெள்ளை நிற ஆகாரம், வெள்ளையனே நடை, பேச்சு, முதலியான கிருஹஸ்தர்கள் செய்வார்களாக.

**ஆந்தரார்த்தம் :** அவ்யாகிருத கற்பித முக்குணங்களின் உத்தமமானதும் இன்பமானதும் சுத்தமானதுமான சாத்துவீக குணமே பிரஹ்ம ஞானமடைந்த ஜீவன் முக்தரிடத்திலும் சேடித்து நிற்குமென்றறியக் கடவீர்களாக.

## 110. வேதமறிதாம்

**பாகியார்த்தம் :** நவலோகங்களையும் குரு மூலிகை வலியாற் சுருக்கிட்டுச் சுத்தி செய்து முப்பூ முடிவால் ரசவாதஞ் செய்து அவற்றால் காய சித்தி முதலிய சுபகாரியங்களை இயற்றல் மிகவருமையா மென்றறிவாயாக.

**ஆந்தரார்த்தம் :** சரீரம், இந்திரியம், பிராணன், மனது இவைகளிலுள்ள அழுக்குகளை கருமானுஷ்டான பக்தி இவை களாற் சுத்தி செய்து ஜீவனை ஞான மூலிகையால் சுத்தஞ் செய்தும், தானே தானாயிருப்பது மிகவரிதென்றறி வாயாக.

## 111. வையக மாற்றோர்

**பாகியார்த்தம் :** உலகத்தில் யாரிடத்திற் சென்றாலும் ஏமாற்றான குணங்களாகவே இருக்கிறபடியால் அவரிடம் கட்டுண்டு மாறி விடாதிருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** தாபத்திரய துக்கம் தீரும் பொருட்டு எதார்த்த ஞானத்தையடைய இச்சை கொண்டனுஷ்டிக்கும் முமூக்ஷுக்களுக்கு விரோதமாக வருவது உலகத்துள்ள ஏடணாத்திரயங்களாதாதலால் அவைகள் உலகமாதலால் அவ்வுலகம் ஞானத்திற்கு மாறென்றறிவாயாக.

## 112. ஒன்பான் றடைகள்

**பாகியார்த்தம் :** கிரகஸ்தர்களிடம் திரவியமிருக்குமானால் அது கொடுவதற்கு ஒன்பது விதத் தடைகளுண்டாகிறது

அவையாவது, ஸ்திரீயிச்சை மிகுதி, மதுபானம், துஷ்டர் சேர்க்கை அடுத்தோர் கேடு, வேட்டைக்குப் போதல், நிலைமை மறத்தல், நல்லோர் தீமை, டம்ப நினைப்பு, சாந்தமின்மை, இவைகளுண்டாகும் கண்டு விக்கியிருப்பீர்களாக.

**ஆந்தரார்த்தம் :** சர்வ தத்துவ நியதி செய்து அவற்றை யுந் தாண்டி ஆங்கு சமாதி அப்பியாசிக்கும் போது, 1. அனு சந்தானம் மறந்து போதல், 2. சோம்பலுண்டாதல், 3. இச்சை யுண்டாதல், 4. நித்திரை வருதல், 5. அந்தகாரந் தெரிதல், 6. விட்சேபமுண்டாதல், 7 பிரகாசந் தோற்றுதல், 8. வேர்வை யுண்டாதல், 9. சூன்ய புத்தியுண்டாதல். இவ்வொன்பது தடை களுண்டாகும் அவற்றைக் கண்டு நீக்கியிருப்பீராக.

## 113. ஔவுதலுண்மை

**பாகியார்த்தம் :** பெண்டு பிள்ளைகள் செல்வ முதலியன நீங்குங் காலத்தில் அதைக்குறித்து வருந்தினால் யாதொரு பலனுமின்றியபடியால் வருந்தாதிருப்பீர்களாக.

**ஆந்தரார்த்தம் :** இந்திரிய நிலை, மனோ நிலை, ஜீவ நிலை முதலியன நாசமடையுமாதலால் அவற்றை நம்பி மோசம் போக வேண்டாம். ஏனெனில், சுழுத்தியிலும், பிரளயத்திலும், சங்கார காலத்திலும், ஞான தசையிலும், இவ்வுலகமும் மனதும் அஞ்ஞானமும் அழிந்து போகுமாகையால் அதில் மயங்காதிருப் பாயாக.

## 114. வெளவுதல் வைரம்

**பாகியார்த்தம் :** அன்னியர்கள் பதார்த்தங்களை அறிந்தோ அறியாமலோ கிரகித்தாயானால் அவருக்கு மனதில் வைர முண்டாகும். அதனால் இப்போதோ மற்றெப்போதோ தீமை விளையுமென்றறிவாயாக.

**ஆந்தரார்த்தம் :** சமதமாதி சாதனங்களைப்பற்றி மோக்ஷ இச்சையால் உலக வைராக்கியங் கொண்டு ஞானானந்த வடிவ குருவுபதேசம் பெற்று அதனால் ஆன்ம சொரூபமாகிய தன்னைத் தானே உணர்ந்து கொண்டு அவற்றையேபற்றி நின்று அதனன்னியமாகத் தோற்றப்பட்ட பிரபஞ்சமெல்லாவற்றையுந் தானான வைராக்கியத்தாற் பார்த்திருப்பதெனவறிக.

## 115. சித்துருவாரமுள்

**பாகியார்த்தம் :** உலகோரெல்லாங் கொண்டாடுகிற விக்கிரக தேவதைகளை உருவாரச் சிலைகளென்றெண்ணாது யதார்த்த வடிவ ஈஸ்வரப் பிரதிமைகளென்றே கருதக் கடவாயாக.

**ஆந்தரார்த்தம் :** தற்போது ஜீவ வடிவமாகத் தோற்றப் பட்ட நாம் நம்மை நமக்குச் சித்து ஞானமென்னு மண்ணினா லாக்கப்பட்ட பதுமையைப் பிரபஞ்ச சங்கிலியுடன் கோர்த்து நம்முடைய கழுத்தினிலணிந்தபின் ஆங்குசென்று நினைத்திருப்பாயாக.

## 116. ஸ்ரீமிரக நில்லா

**பாகியார்த்தம் :** எந்த விஷயத்திலும் நமது மனம் உற்சாகப்படுமானால் அவ்வுற்சாகம் அப்படியே கடைசி வரை நிற்க மாட்டாதென்றறிவாயாக.

**ஆந்தரார்த்தம் :** சத்துவ குணப் பிரதான வடிவமானது ரஜோ குண தமோ குண சம்பந்தமாய் மயங்கி வாதனா வச மடைந்து நின்ற மனது உண்மை ஞான மார்க்கத்திலொழுங்காக நிற்கமாட்டாதென வறிக.

## 117. கெந்தகஞ் செய்வாய்

**பாகியார்த்தம் :** ரசாயன முறைப்படி கெந்தக சுத்தி செய்து அதனைக் கிண்ணமாக்கி அதிற் பால், ஜலம் மற்று முண்டு வருவாயாக.

**ஆந்தரார்த்தம் :** ஞானேந்திரிய கருமேந்திரிய அந்தக்கரண பிராண பஞ்சக காலதத்துவ முதலிய ஓடுஞ் சரக்குகளை ஒழுங்கான கடையில் வாங்கி தத்துவாதீத மூலிகையால் ஓடா மற்றடுத்து அவற்றை ரசாயனஞ் செய்து சவிகற்ப நிருவிகற்பவோடு மூடி சம்பிரக்ஞாத சமாதியென்ற சீலை மண் செய்து ஞானாக்கினியென்னும் புடமிட்டு சகஸ நிஷ்டை யென்னும் பஸ்பத்தையெடுத்து ஜன்ம வியாதியுடைய மனுஷ்யர்களுக்கு அதீதமென்னுந் தேனிற் குழைத்து அன்பென்னு நாவில் தடவி இன்பென்னுந் தொண்டை வழியாய் இருமாப்பென்னு முதரத்திற் சென்று இரக்கமென்னுஞ் சக்தியால் மேற்கூறிய வியாதியை நாசமாக்கும் அழிந்த கெந்தக பஸ்பத்தை அழியாமலாக்குவீராக.

## 118. இரண்டறுமொன்றேர்

**பாகியார்த்தம் :** யாரிடத்திலும் பேசினால் எவ்விஷயத்தை எப்படிப் பேசுகிறோமோ அப்படியே இரண்டு படாமலிருந்து கொள்ளுவாயாக.

**ஆந்தரார்த்தம் :** அத்வைத சொரூபத்தினின்று சங்கற்பித்த துவைத புத்தியானது மறுபடியும் அத்துவைதம் நசிக்குமாறு செய்யப்பட்ட லோகாதீத புத்தியினால் ஒன்றாக்கி அவற்றை ஏற்கக் கடவாயாக.

## 119. ஊனமின் ஞானமோர்

**பாகியார்த்தம் :** மாறிப் போகாததாயும் கெட்டுப் போகாத தாயுமுள்ள உலக விஷயங்கள் செய்து அதிலே கண்ணாயிருப் பீராக.

**ஆந்தரார்த்தம்** : சர்வ தத்துவங்களையுந் தாண்டிய விடத்துப் பிரம்மானு சந்தானஞ் செய்து கொண்டிருக்கும்போது அவற்றின் தடையான நான்கு ஒன்பதுவித வகைகளையும் நீக்கிக் கெடுதியின்றிய திடாபரோக்ஷ ஞானத்தை ஏற்கக் கடவாயாக.

## 120. உற்றிட நழுவேல்

**பாகியார்த்தம்** : முன்னோர்களால் உனக்குப் பொருத்தி வைக்கப்பட்ட இடத்தினின்று எக்காரணங் கொண்டும் விலகாதிருப்பாயாக.

**ஆந்தரார்த்தம்** : பூர்வ ஜன்மாந்திர நிஷ்காமகர்ம புண்ணிய பலமேலிட்டால் உபாசனை, தியானம் முதலிய சாதனங்களாற் சித்தசுத்தி வந்து அதன் பாகத்தாற் சற்குரு கிடைத்து உபதேச வாயிலாக ஞானானுஷ்டானஞ் செய்து ஆன்ம தரிசனமாக்கி அடிக்கடி சமாதி பழகி நின்று கொண்ட அவ்விடத்தினின்று ஒருக்காலும் நழுவாதிருப்பாயாக.

## 121. ஞேயமுந் தள்ளுவார்

**பாகியார்த்தம்** : முன் ஜென்ம புண்ணிய பலமின்றிய வர்க்கு எவ்வளவு ஆத்ம ஞான விஷயங்களைக் கூறினும் அவனது துற்குணமே முன் வந்து சொன்னவைகளனைத்துந் தள்ளி விடுவானென்றறிக.

**ஆந்தரார்த்தம்** : ஜாக்கிர சொப்பன சுழுத்தி என்னு மூன்ற வஸ்தைகளையுந் தாண்டிய விடத்தில் மனதை நிறுத்தி அப்பியாசிக்கு முடிவிலுண்டாகுந் திருபுடியுந் தாண்டிய ஞானிகள் ஜீவன் முக்தி நிலையைப் பெற்றுப் பிராரப்த முடிவில் அதுவுந் துக்கமென்று கண்டுஞேய சொருபமானதையுந் தள்ளி விதேக முக்தி நிலையைப் பெறுவாரென்று கொள்ளக் கடவாயாக.

## 122. ஞையது ஞயமாம்

**பாகியார்த்தம் :** யாரிடத்திலும் நயமாகப் பேசியவரின் நயத்தையே தருமென்றறிவாயாக.

**ஆந்தரார்த்தம் :** மைத்திரி சுருணை முதிதை உபேக்ஷை முதலிய நான்கில் மைத்திரியான ஆன்ம சினேகிதத்தைக் கொண்டு ஆன்ம வடிவ ஞயமே ஜென்மத்தை நிவிர்த்திக்கு மிக்க நன்மை யென்றறியக் கடவாயாக.

## 123. ஜாலமே உலகம்

**பாகியார்த்தம் :** யாரிடம் பேசினாலும் உள்வஞ்சகமான ஜாலமன துடனிருப்பதால் உலகம் பூராவும் ஜாலமயமாயிருக் கின்றதென்றறிக.

**ஆந்தரார்த்தம் :** யதார்த்த ஆத்ம ஞான வடிவ பிரஹ்ம சொருபத்தில் ரஜ்ஜு சர்ப்பம் போலவும், கிளிஞ்சில் வெள்ளி போலவும், இவ்வுலகம் இந்திரஜாலமாகத் தோன்றுமென்றறிக.

## 124. ஓய்தலு முணர்வார்

**பாகியார்த்தம் :** நம்மிடத்து உலக போக சாதனங்கள் குறை வற இருக்கும்போது நித்தியம் வருகிற சிநேகிதர்களெல் லாம் அப்போக சாதனம் ஓய்ந்த காலத்து ஒருவருந் திரும்பிப்பாரார் களாகையால் அவ்விஷயத்தி லுள்ளுணர்வோடி ருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** முக்குணமும், மூன்றவஸ்தையும், மூவுல கிச்சையும் ஆத்மானு சந்தான பலத்தால் ஓயச் செய்து நின்ற முடிவே ஞானமாகையால் ஆங்கு நிற்கக் கடவாயாக.

## 125. ஆலயமாவாய்

**பாகியார்த்தம் :** எல்லோரும் சித்தசித்தநின் மலமடை வதற்குச் சாதனமான தேவாலயங்கட்குச் சென்று ஆங்குள்ள திவ்யமங்கள விக்கிரகத்தின் சொருபலயமாவீராக.

**ஆந்தரார்த்தம் :** ஜீவான்மாவின் லய ரூப வடிவ பரமான்மா வின் யதார்த்த நிலையைச் சங்கற்ப நாசஞ் செய்து சைதன்ய வடிவமாக இருக்கக் கடவாயாக.

## 126. மாலற நிற்பார்

**பாகியார்த்தம் :** யாவரும் மனதிற்கு மயக்கையும் சரீரத் திற்குக் குறைந்த நோயையும் விளைவிக்கும் லாகிரி பதார்த் தங்களை உபயோகிக்காது நிற்கக் கடவாராக.

**ஆந்தரார்த்தம் :** அதிஷ்டான வடிவ அந்தணானந்த அப்பியாச மனோபாவத்தால் மாயாமயக்க நீங்கப் பெற்றுத் தன்னிடத்திலேயே தாங்கள் நின்று துவைதபாவனை நீக்கியிருப்பாரென வறிக.

## 127. தானுறல் சகசம்

**பாகியார்த்தம் :** லௌகீக வைதீக எக்காரியங்களிலும் தானே தன்னுடைய காரியங்கட்கு நேரே பார்த்துச் செய்வதே மிகுந்த சகச வடிவ நன்மையென்றறிவாயாக.

**ஆந்தரார்த்தம் :** அன்பின் வடிவ ஆரோபித ஜகத்தின் அதிஷ்டான வஸ்துவின் அந்தரங்க நிலையை யுணர்ந்து தானாக நின்ற ஞானிகளுக்கு நிஷ்டை பழக வேண்டாமா வென்றறிக.

## 128. மாந்துதன் மாவில்

**பாகியார்த்தம் :** தனக்காகக் கிடைத்த ஏதேது பதார்த்தங்கள் பூறாவும் தானே அனுபவித்து விடாமல் தனது சகோதரர்களுக்கும் பாகித்தீந்து அதை அனுபவிப்பானாக.

**ஆந்தரார்த்தம் :** தன்னுடைய யதார்த்த சொரூபத்தில் நின்று நழுவாமல் அங்கிருந்துண்டாகும் ஆத்மானந்தத்தை வேறாக நினையாது தானாக வெண்ணித் தானாயிருப்பாயாக.

## 129. மாதர்கள் மாதாம்

**பாகியார்த்தம் :** உலகத்திற் றோற்றும் எவ்வகை ஸ்திரீ களைக் கண்டாலும் யாவரும் தாயாக நினைத்திருக்கக் கடவீராக.

**ஆந்தரார்த்தம் :** ஜகத்தின் தமோ குண வடிவ ஸ்திரீ களுக்கு அதிஷ்டான வடிவ மாயையின் சக்தியானது மோக்ஷ மடைவதற்குள்ள அப்பியாசிகளுக்கு மிகுந்த ஹிதத்தையூட்டி ஞானங் காண்பிவித்தலால் மாயையென்ற ஸ்திரீயை மாதாவாக அறியக் கடவீராக.

## 130. பிடரியுட் பேறாம்

**பாகியார்த்தம் :** இந்திரியத்தைக் கட்டினால் பிடரி வழி மேல் ஏற வேண்டியிருப்பதால் அதனுள் லாபத்தைக் கருதி யிருப்பீராக.

**ஆந்தரார்த்தம் :** சோடசகலாமார்க்கத்தால் பிராண வடிவ மனதைச் சுழுமுனையிற் சேர்த்து லம்பிகா யோகத்தால் பிடரி மார்க்கத்துட் சென்று அவ்வழியாகச் செல்வாயாகில் பெரிய ஆத்ம லாபங் கிடைக்குமென்றறிவாயாக.

## 131. சமாதியுஞ் சாரேல்

**பாகியார்த்தம் :** மனிதர்கள் இறந்து போனால் பூமியிற் புதைத்துப் பெரிய கட்டடங்கள் கட்டிப் பூஜை முதலிய செய்வித்து அகும் சமாதியென்றொரு பெயரிடுகிறார்கள். அவற்றைச் சார்ந்திருக்கும் புத்தியை விட்டு விடுவீராக.

**ஆந்தரார்த்தம் :** சப்த சமாதி சப்தங்கடந்த சமாதி, பாவனா சமாதி, அபாவனா சமாதி, விகற்ப சமாதி, நிருவிகற்ப சமாதி, ஞாபக சமாதி, அஞ்ஞாபக சமாதி, வித்து சமாதி,

வித்தற்ற சமாதி முதலிய சமாதிகளை அப்பியாசித்தடைந்து பின் சகல நிஷ்டையைச் சார்ந்த பிற்பாடு ஒருவகைச் சமாதியுஞ் செய்யாதிருப்பாயாக.

## 132. வேதமுங் கொள்ளேல்

**பாகியார்த்தம் :** ஆத்ம ஞானத்தையடைந்த ஞானிகள் தவிர மற்றை யாவரும் ஆகமமார்த்தை அனுஷ்டித்து அதன் வழி நடக்க வேண்டும். வேத வழியைக் கொள்ளாதிருப்பார்களாக.

**ஆந்தரார்த்தம் :** ஆதியிலிருந்த அறிவு வடிவ பரமான்மாவின் கற்பித மாயை அம்மாயையின் கற்பித முக்குணம், அம் முக்குண கற்பிதம் ஈஸ்வரன், ஈஸ்வர கற்பிதம், வேதாந்தம், வேதாந்த கற்பிதம், வேதம். ஆதலால் இவ்வேதம் அனந்த கற்பித வடிவமாக இருத்தலால் ஞானமடைய இச்சை கொண்டு சமாதி பயிலும் எவரும் அவ்வேத நீதியைக் கொள்ளாதிருப்பா ராக.

## 133. வேற்றுருவாகேல்

**பாகியார்த்தம் :** யாவரும் அவரவருடைய அந்தஸ்து, தேசம், காலம், ஆசாரம், ஜாதி, குலம், வீடு இவைகளுக்கு மாறி வேறாகாதிருப்பாராக.

**ஆந்தரார்த்தம் :** நாம் யதார்த்த வடிவ ஆன்ம சொரூபமாக இருந்தும் ஜீவேஸ்வர ஜடப் பிரபஞ்சங்களாக நம்மை நாம் நினைக்கிறோம். ஆகையால் நம்மை நாமுணர்ந்து வேற்றுமையான பதார்த்தங்களையெல்லாம் விட்டொழிந்து ஆன்மான்னிய மின்றியிருக்கக் கடவாயாக.

## 134. எண்ணறுமெண்ணேர்

**பாகியார்த்தம் :** குடும்ப காரியங்களில் துக்கமில்லாத விஷயங்களையே யெண்ணி அதன் வழி வழியே நினைந்திருப்பீராக.

**ஆந்தரார்த்தம் :** அவித்யா கற்பித சங்கற்ப விகாப்ப சூனிய வடிவ ஜட ரூபமனதை ஆன்ம நாட்ட அங்குசத்தாலறுத்து அப்பால் நின்று கொண்டு ஒன்றையும் எண்ணாதிருக்கக் கடவீராக.

## 135. ஏசுவை யேசேல்

**பாகியார்த்தம் :** ஏக நிலையைப் பெற்ற ஏசு கிருஸ்து நாதனை எம் மதஸ்தரும் இகழ்ந்து அவரும் சாதாரண மனுஷ்யனென்று பேசி நிந்தை செய்யாதிருப்பாராக.

**ஆந்தரார்த்தம் :** ஞான நிலை யடைந்து கொண்ட நாம் நம்மை எவ்விதமாகவாகிலும் மனிதர்கள் தேவர்கள் மிருகங்கள் பக்ஷிகள் இவர்களில் யாராகினும் நிந்தை செய்வார்களானால் அவர்களோடெதிர்த்து நீயும் நிந்தை செய்யாதிருப்பாயாக.

## 136. முகம்மது முன்னபி

**பாகியார்த்தம் :** இஸ்லாம் மதத்தின் பெரிய அஜரத்து வடிவ முஹம்மது நபீர் முதலான மஹான்களை முதன் பெற்ற கடவுள் வடிவ தூதர்களென்று கருதியிருப்பீராக.

**ஆந்தரார்த்தம் :** ஸ்தூல சரீரத்தின் உயர்ந்த இடமான முகத்தின் மீதுள்ள பிரமரந்திரத்தில் பைரவி முத்திரையை அப்பியாசித்து அதன் பலத்தால் அங்குள்ள அமிர்த கலச முடைந்து மதுவொழுகும். அம்மதுவை அறிவானந்த நாவால் உண்டு அங்கப்பாலிருப்பாயாக.

## 137. உள்ளொளி யுள்ளேல்

**பாகியார்த்தம் :** இருகண் சிமிட்டல் சுழு முனை நாட்டம் நாத முடிவு பித்தத்தின் மீறிய மயக்கம் மூளை கலங்கல் இவைகளில் பொறி பொறியாக உள்ளே கண்ணுக்கு பிரகாசந் தெரியும். அவற்றிற் கிடங் கொடாதிருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** குருவின் பிரசாதத்தாற் சமாதி பழகும் போது ஓர் அனித்திய ஜட கற்பித கோடி சூரியப் பிரகாசந் தோன்றும். அவ்வொளியை நிசமென்று ஆங்கே நின்று விடாதிருப்பீறாக.

## 138. மாற்றமுந் தோற்றும்

**பாகியார்த்தம் :** எங்கு சென்றாலும் யாரிடம் பேசினாலும் விசாரித்து நிதானித்து மெதுவாக ஆழ்ந்து சென்று பேசுவோ மானால் அதனதன் விஷய மாறுதலெல்லாம் மனதிற்குத் தோற்றுமென்றறிவாயாக.

**ஆந்தரார்த்தம் :** பின்னும் ஆத்ம நிஷ்டையைப் பழகி வரும்போது கடைசியாகப் பிரம்மானந்தம் போலத் தோற்றி மயங்கச் செய்யும் ரஜாஸ் வாதமென்னும் மாயா சக்தி வேறாக வந்து சம்பந்திக்கும் அவற்றில் மாறி மயங்கி விடாதிருப்பீராக.

## 139. ஆங்கிருந்தாட்டுவீர்

**பாகியார்த்தம் :** உலக விஷயத்தில் தேர்ந்த பண்டிதர் களாக வேண்டுமானால் அவரவர்கள் இருந்த இடத்திலேயே அனேக சௌகரியங்களுடனிருந்து கொண்டு எல்லோரையும் அடக்கி ஆட்டி ஆண்டு வருவீர்களாக.

**ஆந்தரார்த்தம் :** பஞ்சகோச, விலக்ஷண, சூனிய, அப வாத, சுதந்தர, மனோலய, லய விக்ஷேப, கஷாய, ரஜாஸ்வாத, பிரம்மானு சந்தான அனுபவ, ஆரூட முதலிய இடங்களும் தாண்டிய அவ்விடத்திலமர்ந்த மாயாவிகாரத்தையுந் தள்ளி அண்டமுடிவான வியாபக அவ்விடத்திலிருந்து கொண்டு அதன் கீழ்ப்பட்ட அஞ்ஞான மனாதி இந்தரிய தத்துவ சகல ஜடப் பிரபஞ்சங்களையும் சாக்ஷியாக நாம் அதைப் பார்த்து அசைத்துக் கொண்டிருப்போமாக.

## 140. ஒன்றிலுங் கூடிடார்

**பாகியார்த்தம் :** குடும்ப நிலை தாளாது ஓழுங்காக இருக்க வேண்டுமவாவுடைய நன்மையுடையவர்கள் உலக டம்ப மனுஷ்யர்கள் செய்யும் எவ்வித ஒரு விஷயத்திலும் கூடி அப்படி நடக்க மாட்டார்கள்.

**ஆந்தரார்த்தம் :** அபார மாயா சக்தியுடன் கூடிய அவ்வுபய ரகித வஸ்துவில் நின்று நிலைத்த ஞானிகள் அதைத் தவிர அன்னிய எவ்வித வஸ்துக்களிலும் கூட மாட்டார்களென்பதாம்.

## 141. எட்டினா லெட்டார்

**பாகியார்த்தம் :** பார்ப்பதற்குப் பயந்ததுபோற் றோற்றுகிற ஸ்திரீகளையும், உதடு கருத்த புருஷர்களையும், கருத்த பல், முகம், தருண்ட மனமின்றிய முகப் பார்வையுடையவர்களையும் கண்டுபிடித்து அவர்கள் மனது இவ்வளவென்று எட்டியறிய முடியாததால் அவர்களை நம்பி எட்ட நினையாதிருப்பீர்களாக.

**ஆந்தரார்த்தம் :** இயம நியம ஆசன பிராணாயாம பிரத்யாகாரதாரண தியான சமாதி வடிவ அஷ்டாங்க யோகத் தால் அறிவு சொரூப அமலன் எட்டார் அல்லது துரியாதீத பூமியில் நிலைத்த ஞானிகளை அந்த ஞானிகள் தவிர மற்றை அஞ்ஞானிகள் யாவரும் எக்காரணங் கொண்டும் எட்டியறிய மாட்டார்களென் றறிக.

## 142. யோகமுன் ஞானமுள்

**பாகியார்த்தம் :** உலக போகம் வேண்டுமென்று இச்சித்து அதில் மனதை நாட்டி அப்படியே அனுஷ்டித்து வந்தால் அதற்கு வேண்டிய யோக காலங் கைகூடி வருமுன் மேற்கூறிய போக சாதன ஞானங் கிடைக்குமென்றறிவாயாக.

**ஆந்தரார்த்தம் :** சுத்தப் பிரம ஞான சாக்ஷாத்காரத்தை அடைவதற்கு முன் லம்பிகா யோகம், சிவ யோகம், ஹட யோகம், ராஜ யோகம், கேசரி யோகம், பைரவி யோகம், சாம்பவி யோகம், நவகண்ட யோகம் முதலிய யோகங்களைப் பழகி அதனப்பால் முன் சொன்ன ஞானத்தை அப்பியாசிக்கக் கடவீராக.

## 143. நாற்குண நாட்டுவீர்

**பாகியார்த்தம் :** எல்லோரும் தமது பெண் குழந்தை களுக்குப் பால்ய காலத்திலிருந்தே அன்னிய புருஷர்களைக் கண்டால் வெட்கம், ஒன்றுந் தெரியாமலிருத்தல், எல்லா விஷயங்களுக்கும் பயப்படுதல், மாதா, பிதா, புருஷன் முதலிய வர்களுக்கு மீறாதிருக்கும்படி பழகி வைத்தல். இந்நால் வகை அரிய குணங்களை நாட்டி வைப்பீர்களாக.

**ஆந்தரார்த்தம் :** முக்குணத்தையும் அவற்றை தாண்டிய குணத்தையும் முக்குண வொன்பது குணத்தையும் ஆத்ம நாட்டத்தால் மாற்றித் தன்னிடத்தில் இருக்கக் கடவீராக.

## 144. கிட்டினாலோடேல்

**பாகியார்த்தம் :** நாய் பேய் பைசாசம் இவைகளும் காம முடைய மாதர்களும் கிட்டே வந்தால் பயந்து ஓடி விடாமற்றிட மாக எதிர் நின்று வாதாடி அவரை யோட்டி விடுவீராக.

**ஆந்தரார்த்தம் :** நிஷ்டாப்பியாச காலத்தில் மாயையானது நானாவித பிரதிபந்தங்களாக வந்து பொருந்தும். அவற்றைக் கண்டு பயந்து ஓடாது நின்று அவற்றையெல்லாஞ் ஜெயஞ் செய்வீராக.

## 145. கற்றவர் கண்டிலார்

**பாகியார்த்தம் :** வேதம் ஆகமம் ஸ்மிருதி புராணம் இதிகாசம் முதலியவைகளைக் குருட்டுப் பாடமாகவும் காயத்திரி அஷ்டாக்ஷரம் பஞ்சாக்ஷரம் பிரணவம் முதலிய மந்திரங்களையுங் கற்றவர்கள் அதனுள் விஷயத்தைக் காணமாட்டார்களென வறிக.

**ஆந்தரார்த்தம் :** சர்வ மத தத்துவ விஷயங்கள், இன்னும் தனது அனாத்ம தத்துவங்கள். இவைகளைக் கற்றுத் தேர்ந்தவர்கள் தனது யதார்த்த நிலையைத் தெரிந்து காண மாட்டாரென வறிக.

## 146. ஒட்டுவதொட்டேல்

**பாகியார்த்தம் :** சரீரம் ஆகாரம் பேச்சு இவைகளுட னொட்டி வரப்பட்ட கெட்ட விஷய இச்சைகளில் நீ ஒட்டா திருப்பாயாக.

**ஆந்தரார்த்தம் :** ஞானாரம்ப கால முதல் முடியும் வரை வந்து பொருந்தப்பட்ட எவ்விதச் செயல்களானாலும் அவற்றை நம்பி ஒட்டாமல் உன்னிடத்திருப்பாயாக.

## 147. புண்ணியம் பெறுவீர்

**பாகியார்த்தம் :** புத்திரன் தனம் வீடு சரீர சௌக்கியம் இவைகள் க்ஷேமம் உண்டாகவும் வேண்டுமென்று மிகுந்த புண்ணியச் செயல்கள் புரிவீராக.

**ஆந்தரார்த்தம் :** சுபாவமான அறிவுடன் தன்னிலை யினின்று மாறாது பற்றற்று யதார்த்தமான திரிவித கரணங் களும் காணாத ஆத்மாவாகி அகர்த்த பாவனையால் அவற்றைச் செய்யாதிருப் பாயாக.

## 148. ஞொள்கலு மின்றேர்

**பாகியார்த்தம் :** நாள்தோறும் நவக்கிரகங்களுக்குச் சகாய மான பிராயச்சித்தங்கள் செய்து வந்தால் அவர்களது கிருபை யால் ஸ்தூலத்திற்கு யாதொரு இடையூறு மின்றென் றறிவீராக.

**ஆந்தரார்த்தம் :** ஆன்ம வடிவமானது அகங்கார தத்துவத்தைப் பெற்று அன்னியமானபடியால் அதை அதுவே அன்னியமாக நினைத்துச் சுக துக்கத்தில் மாறி ஆழ்ந்து பிறக்கின்றன. ஆதலால், அவற்றை அறிவால் விசாரணை செய்து அவ்விஷய மயக்கத்தை யில்லாமலாக்கி விடுவீராக.

## 149. நேதிசெய் ரிலமேர்

**பாகியார்த்தம் :** மேட்டு பூமி, மிகுந்த தாழ்வுற்ற பூமி உவர்ப்பூமி இவைகளின்றிய நிலங்களை வாங்கி அதை ஏற்றுக் கொள்வீராக.

**ஆந்தரார்த்தம் :** இது நானல்ல இதுவல்லவென்று எல்லாங் கடந்து நின்று துரிய நிலத்தை என்னாளும் கண்டு ஏறியிருப்பீராக.

## 150. அறவறவறவுள்

**பாகியார்த்தம் :** தனது செல்வம் பூமி மனை முதலிய மற்றுள்ளவெல்லாம் அற்றுப் போக அததற்குள்ளபடி மனம் நினைத்துச் சமாதானமடையு மென்றறி வாயாக.

**ஆந்தரார்த்தம் :** மாயாதத்துவம் தாண்ட மகத்துவம் வரும்.

அது கடக்க அறிவின் தத்துவந் தோன்றும்.

அதை அறுக்கப் பிரகிருதி தத்துவம் வரும்.

அதைத்தாண்ட ஆகாச தத்துவம் வெளி வரும்.

அதுவுந்தாண்ட அம்பரவுணர்வு தோன்றும்.

அது தள்ளிச் செல்ல அகண்ட வெளியாகும்.

அதைக் கடக்க அத்தகைய இடமே அதிகமாகத் தோற்றும்.

அது தள்ள அந்தகாரந் தெரியும். அதுவு முற்ற ஓர் பிரகாசந் தெரியும்.

அதுவு மகற்ற அகங்கார தத்துவம் வரும். அது நழுவ அளவற்ற ஜோதி தோன்றும்.

அதுவு மகல அறிவுண்டாகும். அதுவும் போக ஓர் மயக்கமுண்டாகும்.

அம் மயக்க நீங்க மாயை யுண்டாகும். மாயை நீங்க த்வைதாவனை தோற்றும்.

அது மறைய த்வைதாத்வைத வர்ஜிதம் தோற்றும்.

அதை யொழிக்க அகாச போதம் வரும்.

அதை நீக்க அகண்ட வுணர்வு தோன்றும்.

அதையுங் கடக்க ஓர் பெரிய இன்பந் தோற்றும்.

அதைத்தாண்ட பெரிய துன்பந் தோற்றும்.

அதுவுங் கடக்க துன்ப இன்ப ரகித நிலை வரும்.

அப்பாற் செல்ல ஆன்மவுணர்வு சிறுக வரும்.

அதற்கப்பால் சென்றோமென்ற நினைப்பையு மறுத்து

அறுத்தோமென்ற அறிவையுமாற்றி

மாற்றினோமென்ற மனதையும் மாய்த்து

மாய்த்தோமென்னு மதியையு மீர்த்து

ஈர்த்தோமென்ற இன்பத்தையுந் தொலைத்து நின்ற அவ்விடத்தினின்று ஜீவேஸ்வர பாவனை நீக்கி அவ்வுள்ளே அகண்ட நாம ரூப ரகித சர்வ விலக்ஷண மாயாரகித மனோ வகோசர மாற்றமில்லாத பிரஹ்ம தரிசன முண்டாகும். அவ்வான்ம வடிவமாகிய தன்னைத் தானே தனித்துஜீவப் பிரஹ்ம ஐக்கிய வடிவ பிரம்மானுபூதிச் செல்வராய் அவ்வுள்ளே இரண்டறக் கலந்து அத்வைதமாய் ஆனந்தாதீதமாய் இருக்கக் கடவீர்களாக.

இவ்வண்ணமாக **அக்ஷர நுட்ப**மென்னு மிவ்வனுபவ நூலின் பாகியார்த்த அந்தரார்த்த சூக்ஷ்மம் அனுபவ தாத்பர்யங்களைச் சுருக்கப் பொழிப்புரை வாயிலாகக் கூறியது இதோடு முற்றுப் பெற்றது.

-: ஓம் தத் ஸத் :-

ஓம்
தத் ஸத்

தேவார நகரம்
சுத்தாத்வைதி அருட்கவி
ஸ்ரீ
விலக்ஷணானந்த ஸ்வாமிகள்
அருளிச் செய்த

# கைவல்ய நவநீதம்

முதற் பாட்டுப் பாஷ்யவுரை

1919

ஓம் தத் ஸத்

# சுத்தாத்வைதி அருட்கவி
# ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள்

அருளிச் செய்த

# கைவல்ய நவநீதம்

## முதற்பாட்டுப் பாஷ்யவுரை

### பாயிரம்

### அவதாரிகை

ஓம் தத் ஸத்

சுத்த ஷாட்குண்ய பரமானந்த அவதிரூப சச்சிதானந்த நிஷ்கள நிராமய நின்மல நிரஞ்சன அவிரோத அவ்யாஞ்சன அவ்யாகிருத அமண்டல அகண்டாகார அபரோக்ஷ பரோக்ஷ ஆனந்த திவ்யமங்கள விக்கிரஹ நித்திய காலாக்ஷ கருணாகர சின்மாத்ர சிற்சொரூப சிதாகாச சோபானக்கிரம அப்ரமேய அவாங்மனோவகோசர குணரகித முக்குண விலக்ஷண சதானந்த சாந்தானந்த போதாந்த சிதானந்த சின்மாத்ரானந்த நிர்மலானந்த விவேகவமலாந்த பிரமானந்த அதீதானந்த விஷயானந்த உலகானந்த மனுஷ்யானந்த தேவானந்த நிராமயானந்த நேசானந்த அனுபவானந்த பரானந்த நிர்க்குணானந்த சகுணானந்த பரவசானந்த யோகானந்த ஞானானந்த அனுபூதியானந்த ஆரூடானந்த அப்பியாசவானந்த அகண்டானந்த ஆனந்தானந்த சுகானந்த சக்தியானந்த சகலானந்த கேவலானந்த கிரியானந்த கீழானந்த மேலானந்த சகசானந்த விதியானந்த விமலானந்த வியக்தியானந்த உபாதியானந்த உபாதிரகிதானந்த வீசானந்த சிவானந்த துக்கானந்த தாந்தானந்த திருப்தியானந்த தியக்கானந்த மனோமயானந்த மனானந்த கோசானந்த குறியானந்த

சிற்றானந்த பேரானந்த பிரலாபானந்த குணானந்த குணரகிதானந்த பாசானந்த விரக்தியானந்த அபாண்டானந்த ராமானந்த ரக்தானந்த சோமானந்த சோபானந்த நாதானந்த நதானந்த மதானந்த விஞ்ஞானானந்த பிரபஞ்சானந்த தூலானந்த சூக்குமானந்த காரணானந்த பேதானந்த அபேதானந்த வேதானந்த சூன்யானந்த பிரகிருதியானந்த சொப்பிரகாசானந்த சுயம்பிரகாசானந்த சத்தானுவித்த சவிகற்ப சமாதியானந்த சத்தானனுவித்த சவிகற்ப சமாதியானந்த அத்வைத பாவனாரூப நிருவிகற்ப சமாதியானந்த அத்வைத அவஸ்தானரூப நிருவிகற்ப சமாதியானந்த சமாதியானந்த சகுண சமாதியானந்த நிர்க்குண சமாதியாதியானந்த சகுணசமாதி விகற்பசாந்தியானந்த சமாதிநிர்க்குணானந்த விகற்ப சமாதியானந்த அத்வைதானந்த துவைதானந்த விசிஷ்டாத்வைதானந்த அத்வைத அமலானந்த துவைதவிவேகானந்த விசிஷ்டானந்த விமலானந்த விசிஷ்டாத்வைத வேதானந்த தொய்தாத்வைத வர்ஜிதானந்த நாமானந்த வீரானந்த பாவனானந்த அபானானந்த அபாவனானந்த அவஸ்தையானந்த பீஜசமாதியானந்த நிர்க்குணானந்த சம்ரக்ஞாத சமாதியானந்த அசம்ப்ரக்ஞாத சமாதியானந்த நிஷ்டையானந்த ஜீவன் முக்தியானந்த பராகாசானந்த பக்குவானந்த அபக்குவானந்த விதேக முக்தியானந்த சுத்தானந்த அசுத்தானந்த சக்திரகிதானந்த சகசசாந்தானந்த சாக்கிரானந்த பீஜசாக்கிரானந்த சாக்கிர பீஜானந்த சாக்கிர சாக்கிரானந்த சாக்கிர கனவானந்த சாக்கிர பீஜ கனவானந்த சாக்கிர சுழுத்தியானந்த சாக்கிர துரியானந்த சாக்கிர துரியாதீதானந்த சொப்பனானந்த கனவு கனவானந்த பீஜ சொப்பன கனவானந்த சொப்பன சுழுத்தியானந்த சொப்பன துரியானந்த சொப்பன துரியாதீதானந்த சுழுத்தியானந்த சுழுத்தி துரியாதீதானந்த துரிய சாக்கிரானந்த துரிய சொப்பனானந்த துரிய சுழுத்தியானந்த துரிய துரியானந்த துரிய

துரியாதீதானந்த துரியாதீதானந்த துரியாதீத சாக்கிரானந்த துரியாதீத சொப்பனானந்த துரியாதீத சுழுப்தியானந்த துரியாதீத துரியானந்த துரியாதீத துரியாதீதானந்த சமுதாய விவற்றானந்த விமல சிவானந்த கோச துரியானந்த சத்த சத்தானந்த அவித்தையானந்த வித்தையானந்த பிரகிருதி மாயாரகித சத்துவானந்த மாயானந்த பீஜ மாயானந்த வைராக்கியானந்த அனித்தியானந்த நிரங்குசானந்த சத்தானந்த சார்பானந்த சத்துவானந்த இரோதியானந்த ரஜோகுணானந்த தமோகுண வடிவானந்த முக்குண சமுதாயவானந்த சித்தானந்த சிரமானந்த விஞ்ஞானானந்த முதலிய ஆனந்த வகைகளின்னும் பலவிருக்கின்றன. அவற்றை யீண்டு கூறில் விரியுமெனச் சுருக்கினோம்.

இத்தகைய ஆனந்த வடிவமெல்லா மொருங்கு சேர்ந்த இலக்ஷியார்த்தவஸ்து ஒன்றிருக்க வேண்டும். அவ்வஸ்து யாதென்று முதலில் ஆராய்வோம்.

அதாவது,

சமஸ்த ஜகங்கட்கும் மதங்கட்கும் தேசங்கட்கும் அண்டங் கட்கும் புவனங்கட்கும் தேவர்கட்கும் ஈஸ்வர ஜீவர்கட்கும் எட்டாததாய் எங்கும் நிறைந்ததாய் நாம ரூபமற்றதாய் வாக்கு மனது இவைகளுக்கு அகோசரமாய் இருக்கப்பட்ட சைதன்யமே அவ்வஸ்துவென்னலாம். அவ்வஸ்துவையடை யாத ஒருவனுக்கும் எவருக்கும் துன்பந் தீராதென்பது எனக்கும் சுருதி யுக்தி அனுபவமென்னு மூன்றிருக்குஞ் சம்மதமாகும். ஆதலால், அவற்றை அதாவது பிரஹ்ம சொருபத்தையடை வதற்குச் சாதகமான சரியாபாதம் நான்கும். சமாதிபாதம் நான்கும் மற்றும் வைதீக விஷயங்களையும் அடைய வேண்டியதவசியம். அதற்கு மேற்கூறிய அகண்ட வஸ்துவை யடைந்த அனுபூதியானந்தம் பெற்ற மஹான்களாலன்றி ஏனைய மனிதர்களாற் கூடாதாதலால் தஞ்சாவூர் ஜில்லா

நன்னில நகர்வாசியான நாராயண மஹாகுருவின் பிரதம சிஷ்யரான இந்நூலாசிரியர் தாண்டவராய ஸ்வாமிகள் என்பார். சமஸ்த வேதாந்த அனுபவ சாரங்களை யெல்லாந் திரட்டி இரண்டு படலமாகத் தொகுத்துக் கைவல்ய நவநீதமென்னும் நாமமிட்டு ஒரு நூலை வெளிப்படுத்தினர். இதில் அன்னோருட் கருத்து யாதோவறிகிலோம், ஆயினு மெம்மாலியன்றவாறு பொருள் கூறுவாம்.

முதலில் நம்பாரத நாட்டின் முறைப்படி யார் எக் காரியத்தைச் செய்ய ஆரம்பித்த போதும் வஸ்துவின் சொரூப வணக்கங் கூறுவதவசியம். ஏனெனில், சர்வகாரிய ஜகங்கட்கும் காரணமவனாதலால் அவனது பூர்ணகிருபையைப் பெற்றா லன்றி யாதொரு இடையூறின்றி நிறை வேறாதாகையால் இன்னூலாசிரியர் பரவஸ்துவின் மங்கலங் கூறத் தொடங்கி மூவகை வணக்கத்திலோர்வித வணக்கங் கூறுவானாரம்பித்துப் பொன்னிலம் என்றடியெடுத்து இன்னூலைப் பூர்த்தி செய்தனர்.

இனிக்கீழ்வருமாறு

பொன்னில மாதராசை பொருந்தினர் பொருந்தாருள்ளந்
தன்னிலந்தாத்திற்சீவ சாக்ஷிமாத்திரமாய் நிற்கும்
என்னிலங்களினுமிக்க வெழுநில மவற்றின் மேலாம்
நன்னிலமருவுமேக நாயகன்பதங்கள் போற்றி.

**பொழிப்புரை :**

மண் பெண் பொன் இம்மூவித ஆசை சம்பந்தித்த அஞ்ஞானி இருதயத்திலும் சம்பந்திக்காத ஞானிகளிருதயத் திலும் பொன்குடம் மண்குடம் இவைகளிற் றாரதம்மியமின்றி நிறைந்திருக்கும் பூதாகாயத்தைப் போலப்பரமாத்மாவானது நிறைந்து நிற்கின்றது. எல்லாப் பூமிகளுக்கு மேலாயுள்ள ஏழு நிலத்திற்கு மப்பாலுள்ள நல்ல நிலத்திற் பொருந்தியிருக்கப்பட்ட அத்வைத சொரூபனது பாதங்களுக்கு நமஸ்காரம்.

# குரு ஸ்தோத்திரவுரை

மூன்றாசையை யில்லாமலாக்கிய ஞானிகள் இருக்கும்படி யாக்கிய அஞ்ஞானிகள் இருவரிடத்திலும் சேர்ந்த வஸ்து வானது பரிபூரணமாயினும் எல்லா நிலங்களும் அதாவது நமது பாரத நாட்டிலுள்ள எல்லா நகரங்களிலும் மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடிய நகரேழாம்.

அவையாவன,

அயோத்தி, மதுரை, மாயா, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை, இவ்வேழு நகரங்களுக்கு மேலானதும் மகத்துவம் பொருந்தியிருக்கப்பட்டதும் முக்கியமானதுமாயிராநின்ற நமது தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள **நன்னிலம்** என்னும் நகரமேயாகும்.

இதிலோர் சங்கை நிகழ்கின்றது. அதியற்புதவாச்சர்ய மகத்துவமான இவ்வேழு முக்தி நகர்களுக்கு மேலானதென நன்னிலத்தைக் கூறுதல் தகுமோ தகாதென்பதேயாம்.

எனினும், இத்தகைய தாத்பரியமும் பொருந்துமென்பதை இனி விளக்கிக் காட்டுவாம்.

இக்கைவல்ய நூலாசிரியறான தாண்டவராய ஸ்வாமி களது பரமகுருவாகிய ஸ்ரீ நாராயண குருவென்பவர் மேற்கூறிய நன்னிலமென்னுந் தலத்திற் ஜனித்தவரேயாம்.

இதற்கென்ன பிரமாணமெனிலோ, கைவல்ய நவநீதம் இரண்டாவது படலக் கடைசியில் வித்தியானந்தங் கூறுங்காலை யில் **நன்னிலந் தனிலெழுந்த நாரணன் கிருபையாலே** எனக் கூறியிருக்கிறது.

ஆனதால், முன்கூறிய தாத்பரியம் பொருந்தும்.

பின்னுமிந்த நன்னிலமென்பது நல்ல சத்துக்கள் வசித்ததும் வசிக்கிறதும் வசிக்கப் போகிறதுமான இடமென்பது

மொருதலை பொருந்தும். இத்தகைய நன்னிலத்திற் பொருந்தி யிருக்கப்பட்ட எனது ஆசாரியரான நாராயண குருவின் இரண்டு பாதகமலங்கட்கு இரண்டறக் கலந்து நமஸ்காரம்.

## லௌகீக ஆரம்பவுரை

திரவியம் நஞ்சை புஞ்சை நிலங்கள் வீட்டின் மாயா தேவப் பிரசிடெண்டுகள். இம்மூன்றுவித அழகும் வாய்ந்திருந்த வருடைய மனதில இவ்வுலகம் ரம்மியமாகத் தோற்றுகிறது. இம்மூன்றும் வேண்டுமென்று நினைக்கின்றவர்களுக்குக் கிடைக்கவில்லையாயின் அவனுக்கு உலகம் துக்கமயமாய்த் தெரிகிறது. அதற்கு அவன் என்ன செய்ய வேண்டியதெனிலோ, இப்பாரத நாட்டிலுள்ள எல்லா நிலங்களுக்கு மேலானதுமாகிய உயர்ந்தநில மேழிருக்கின்றது.

அவை,

நீலகிரிமலை, கொடைக்கனால்மலை, சிம்லாமலை, சேர்வறாயமலை, திருவாங்கூர்மலை, ஸ்ரீ சைலமலை இமயமலை இவைகளாம்.

இவ்வுயர்ந்த ஏழுநிலங்கட்குச் சென்று அங்குள்ள திரவிய லக்ஷியார்த்த மலை நிலங்களைத் தேடிச் சொந்தமாக்கி அங்கனேக நாட்களிலிருந்து வெகு சிரமப்பட்டு அனேக திரவியங்கள் சேர்த்து அதனால் அனேக ஸ்திரீகள் வேண்டிய நிலங்கள் இவைகளை அம்மலையிலேயே தயார் செய்து கொண்டு முன் கூறிய ஏழுவுயர்ந்த மலைகளுக்கும் மேலாகியதும் அதி அற்புதமானதுமான சென்னை மாநகரில் ஓர் பங்களா கட்டுவித்து அதில் முன்கூறிய திரவியம் அதைச் சுற்றிலும் விஸ்தாரமான இடங்கள் ஸ்திரீகள் முதலிய மூன்றுஞ் சேர்த்து அவைகளை மிகுந்த நாளைக்கு அம்மூன்றின் மயக்கந் தீரும் வரை அனுபவித்து அவைகளில் கசப்புத் தோற்றி வெறுப்

புண்டான பின் அவ்விஷயபோக இச்சையைத் தள்ளிவிட்ட இடத்திலுதயமாகா நின்ற பரமானந்த வடிவ பகவானது சீர்பாதங்கட்கு அநேக நமஸ்காரம்.

இம்முதற் கவிக்கு இன்னும் அனந்தவிதத் தாத்பர்யங் கூறலாம். ஆனால், மிகவும் விரிந்து பெருகி விடுமென்று என் மனதஞ்சுகிறபடியால் இன்னும் ஓர் பெரிய விருத்தியுரை மாத்திரமெழுதிவிட்டு இதோடு முடித்து விடுகிறேன்.

## விருத்தியுரை

1. உலகத்தில் ஆசைகள் பலவிருக்க மூன்றாசையாக மட்டுங் கூறியதெதனாலெனில், சர்வ ஆசைகளும் மூன்றிற்குள்ளடக்கமாதலாலங்ஙனல் கூறியதாம்.

பின்னுமுள்ள ஆசாரியர்களும் மஹான்களும் மூன்றாசையாகத்தான் குறிப்பித்திருக்கின்றனர். ஸ்ரீ கிருஷ்ண பகவான் ஸ்ரீ பாகவத கிரந்தத்தில் ஏஷணாத்திரயங்களையே வற்புருத்திக் கூறியிருக்கின்றனர்.

அதாவது,

ஆசையென்னுமோர் விதையை மனதென்னும் பூமியில் நட்டு ஆத்திரமென்னுஞ் சலமுற்ற இவ்விதை பொருளாசை யிலரும்பு விட்டு ஸ்திரீகளது மெல்லிய ஸ்தனத்தின்மீது படர்ந்து மேலேறிக் கொடி வீசிப் புத்திரனென்னும் பந்தலிற் பரவிப் படர்ந்து விஸ்தாரமாகிக் கொழுந்து விடவாரம்பிக்கின்றது. பின், மாதர்கள் சங்கற்பம் அல்லது காமம் என்னும் அரும்புகள், படுத்தலென்னும் புஷ்பங்கள் அவர்களது ஆலிங்கமென்னும் பிஞ்சுகள், லிங்கதாடனமென்னுங் காய்கள் கிரியா நிவிர்த்தி யென்னும பழங்கள் குடும்பமென்னும் விழுதுகள் ஜனன மரணங்களென்னும் ஆணிவேருமாக நிலைத்திருக்கின்றது எனக் கூறியுள்ளார்.

2. அஞ்ஞானியிடம் மூவாசை பதிதற்கும் ஞானியிடம் பதியாதிருத்தற்குங் காரணமியாதென்று சங்கை நிகழுமாயின்,

மூவாசையு முக்குணங்களுக்குளடங்கியவைகளாம் அம்முக்குணமுந் தாராளமாக வசிப்பதற்குத் தகுந்த இடம் சங்கற்ப விகற்ப ரூபமனதாம். இம்மனத்தை அஞ்ஞானிகள் வெகு சகஸமாகக் காமக் குரோத லோப மோக மத மாத்ஸர்ய மென்னும் ஆறு வகை சைன்யங்களுடனும், முக்குணங்களென் னும் ஆயுதங்களுடனும், மோகனென்னுந் தந்திரியுடனும், மயக்கனென்னு மந்திரியுடனும், டம்பனென்னுஞ் சேனாதிபதி யுடனும் லோபனென்னும் வேவுகாரனுடனும், சண்டாளி யென்னும் பெண் சாதியுடனும், அநீதியென்னு மகளுடனும், அக்கிரமனென்னு மகனுடனும், வியபிசாரியென்னுடனு மருமகளுடனும், சண்டாளனென்னு மைத்துனனுடனும், அகங்காரனென்னுந் தகப்பனுடனும், அவித்தையென்னுந் தாயுடனும், சூன்யனென்னு மாமனுடனும், பிரகிருதி யென்னுந் தங்கையுடனும், மூர்க்கனென்னு மருமகனுடனும், அவமான னென்னும் பேரனுடனும், மதனென்னும் பௌத்திரியுடனும், மற்சானென்னுந் தாய்மாமனுடனும், மாயனென்னும் ஷட்டகனுடனும், மஹாமாயையென்னுந் தமக்கையாருடனும், அசூயையென்னும் அக்கா மகளுடனும் அகங்காரி யென்னுந் தங்கை மகளுடனும், ஒன்றுந் தெரியாதவனென்னு மடுத்த வீட்டுக்காரனுடனும், மற்றுங் கெட்ட குணங்களென்னும் பந்து ஜனங்களுடனும் நெடுங்காலம் பயின்று அம்மனதை அப்படியே அதிகமாக வளர்த்துக் கொண்டு வந்ததால் அஞ்ஞானியிடம் மூன்றாசையு நிலைக்க இடங் கொடுத்து விட்டது.

## ஞானிகட்கோவெனில்,

முக்குணமும் அதனால் வரும் ஜனன மரணங்களும் அவற்றின் விகாரங்களும் இவற்றிற் கெல்லாமாதாரமான

அந்தக்கரணமும் அவ்வந்தக் காரணத்துக் காதாரமான அஞ் ஞானமும் குருவின் பிரசாத ரூபசமாதியானந்த ஞானானுபவ அக்னியாலெரிந்து பஸ்பமாகப் போனதால் மூவாசைகளும் ஞானியிடந் தங்குவதற் கிடமில்லை.

3. ஞானி, அஞ்ஞானி, இவ்விருவரிதயங்களிலும் பரமாத்மா வானவர் பக்ஷபாதகமின்றி அபேதமாக நிறைந்திருத்தல் கூடுமோ வென்றாராயில் கூடாதென்பேன், ஏனெனில்,

அஞ்ஞானி காமாதி பதின்மூன்று விகாரங்களுடனும் ஜனன மரண அவஸ்தைகளுடனும் விழித்தல், கனவு, தூக்கம், இவைகளுடனும் ஸ்தூல சூட்சும காரண சரீரங்களுடனும் பஞ்சகோச விகாரத்துடனு மிருக்கப்பட்டவனாதலால், அவனுடைய இருதயத்திற் பரமாத்மா இருந்தால் அவருக்கும் முன்கூறிய ஜனன மரண விகாரங்களுடனும் மற்றுமுள்ள விகாரங்களுங் கூடிய பிணிவந்துறுமாதலால், அஞ்ஞானி மனதில் பரமாத்மா இருத்தல் அவருடைய அன்பிற்குக் கூடாததென்பதே நமது பூர்வபக்ஷ சித்தாந்தம்.

பின், இரண்டாவது அஞ்ஞானி மனத்திற் பரவஸ்து இருந்தால் அஞ்ஞானமும் அதனதன் ஜனன மரணங்களும் அன்னவரைப் பொருந்த மாட்டாது. எதுபோலவெனில், அநேக பெரிய விஸ்தாரமான நதிகள் சேர்ந்து சமுத்திரத்தை யடைந்தாலும் அல்லது சமுத்திரமே எதிர்த்து எல்லா நதிகளிலும் உலகங்களிலும் மற்றெல்லா விடங்களிலும் நிறைந்ததாயின் அதனதன் விகாரங்கள் சமுத்திரத்தினிடம் செல்ல மாட்டாது. பின்னும் நல்ல சுத்தமான ஜலங்களெவ்வளவானாலும் சமுத்திரத்தினுப்பை மாற்ற முடியாது. அதுபோல, பரமாத்மா வானவர் அஞ்ஞானி மனதில் இருந்த போதிலும் அதன் விகாரங் களவரைத் தாக்க மாட்டாது. சாதாரணமான பூதாகாயமே பிராமணர்கள் வீடென்றும் சண்டாளர் வீடென்றுமெதிர் பாராது

நிறைந்திருக்கிறது மற்றும் பிரபஞ்ச சூரியனும் பிராமணர்கள் அர்க்கியம் செய்துவிட்ட பரிசுத்த ஜலத்திலும் நீசர்கள் கோமாம்சத்தையறுத்துக் கழுவிய அசுத்த ஜலத்திலும் பிரதி பிம்பிக்கிறான். பின்னும், பெரியோர்கள் யாக குண்டத்திலும் மயானத்திலும் சூரியனது வெயிற்படுகிறது. இவ்வகை நியாயங்களாற் பார்க்கும்போது ஓர் அற்பமான பூதாகாயமும் பூத சூரியனுமே சுத்தாசுத்த பேதங்களின்றி நிறைந்து எங்கு நிற்குமாயின் சிதாகாச வடிவமும் சொப்பிரகாசமும் ஞான சூரியனுமான பரம சைதன்ய நிஜ சொரூப பரமாத்மாவானவர் ஞானி அஞ்ஞானி பேதமின்றி இருவரது இதயத்திலும் நிறைந் திருக்கிறாரென்பதைக் கேட்கவா வேண்டும். ஆனபடியால் இவ் வகைப் பிரமாணங்களைக் கொண்டு பூர்வ பக்ஷிதர்க்கித்த விஷயத்தை இங்கு கண்டித்து உத்தரபக்ஷ சித்தாந்தத்தை ஸ்தாபித்தோம்.

இதுவரை இவ்வாறு கூறிவந்ததில் ஓர் சந்தேக மெனக்கு மேற்படுகிறது.

## அஃதெதுவெனிலோ

பரமாத்மாவானது ஞானி அஞ்ஞானி இருவரிருதய பேத மின்றி நிறைந்திருக்கிறது என்பது வாஸ்தவந்தானென்றாலும் மற்றோர் வினா இங்கு நிகழ்கின்றது.

63 நாயன்மார்களில் ஒருவராயும் சைவ சமயாசாரியர் நால்வருளொருவராயும், பரமேஸ்வரனது பூர்ண கிருபை பெற்றவராயும், பிரஹ்ம நிஷ்டாபரர்களாயும், சதா உலகவுபகார சிந்தனையுடைய வராயுமிராநின்ற யாதொரு திருநாவுக்கரசு சுவாமிகளுண்டோ.

அன்னோராலருளிச் செய்த **தேவாரம்** என்னும் பெரிய ஈஸ்வரப் பிரசாத அனுக்கிர அனுபூதி வடிவ அபார நூலில்

ஓரிடத்தில் ஓர் பாசுரத்தில் **அறியானை அந்தணர் தம்சிந்தை யானை** எனவும், தாயுமானவர் தமது அனுபவ நூலில் **கருவி கரணங்களோய்ந்த தொண்டர்களிடத்தில் நீ வீற்றிருப்ப தெனவும்,** கூறியிருக்கின்றனரே,

இவ்விதமாக இன்னோர்கள் கூறியிருக்கும் பாசுரத்தின் தாத்பர்யப்படி நோக்குமிடத்து, அவர்களதபிப் பிராயப்படி ஞானி அஞ்ஞானி இருவரிருதயங்களிலும் பரம்பொருள் பேத மின்றி நிறைந்திருக்கின்றது என முன்கூறும் வாக்கியத்திற்கு விரோதமாகத் தெரிகிறது என்று கேள்வி வருமாயின், அப்பர், தாயுமானவர் முதலிய மஹான்கள் வெளிக்கு சைவ சித்தாந்தியர்களாகத் தெரிகிறபடியால், கைவல்ய நவநீத நூலிற் கூறியபடி அகண்டாகாரப்பிரம வஸ்துவை அங்ஙனம்கூறாது, கைலாய கிரியிலுள்ள மான்மழுசூலபாணினியாகிய திரிநேத்திர பரமசிவனை அங்ஙனங் கூறியிருக்கலாமோவெனில்,

அங்ஙனமல்ல ஏனெனில், மேற்கூறிய இரண்டு மஹான் களும் நம்மைக் காட்டிலும் ஒரு விஷயத்திலும் தாழ்ந்தவர் களல்லவென்பது நமக்குச் சம்மதம். எனிலோ, ஒன்றுந் தெரியாத நாமே அதாவது நம்முடைய யதார்த்த நிலையே தெரிந்து கொள்ள இயலாத ஸ்தூல புத்தி சகித வடிவ நாமே அகண்டமென்றும், அத்வைதமென்றும், வியாபகமென்றும் கூறி வஸ்து ஸ்தாபனஞ் செய்வோமானால் அன்னோர்கட்குக் கூற வேண்டுவதொன்றுளதோ, முன்கூறியபடி திருக்கைலாயத்தில் வசிக்கின்ற சிவபெருமானைப் பரவஸ்துவாகக் கூறியிருப்பார் களோவென்றால் அங்ஙனமல்ல கைலாயமென்பது வேறொன்றுமன்று மற்றெதுவோவென்ற கேள்வியுண்டாகு மாயின் திருவிளையாடற் புராணம் திருக்கைலாயப் புகழ்ச்சி கூறத் தொடங்கு முதற் பாசுரத்திலேயே,

பிரம, விஷ்ணு, ருத்ர, மஹேஸ்வர, சதாசிவன் முதலிய பஞ்சமூர்த்திகள் இன்னுமுடைய இந்திரன் முதல் அஷ்டதிக்குப்

பாலகர்கள் சப்தரிஷிகள் பின்னுமுள்ள மஹரிஷிகள் முனீஸ்வரர்கள் முதலியோர்களையும் அன்னோராற் கொடுக்கப் பட்ட வரங்களையும் அவ்வரத்தின் பிரயோஜனங்களையும் தாண்டி யப்பாலிரு கரங்களையும் கூப்பிச் சிரமேற்றாக்கி மன தேகாக்கிரமடைந்து ஜகதீஸ்வர கிருபையால் ஞானத்தின் பிரதிபந்தமுக்கிய அவித்தையின் சாமர்த்திய மாயையைத் தாண்டி வாக்கு, மனம், ஞான நிச்சயம், இவைகளையுந் தாண்டி ருக்கு, யசுர், சாமம், அதர்வண என்னும் நான்கு வேதங்களை யும் வேதாந்தங்களையும், கடந்து அப்பாற் பொருந்தியிருக்கப் பட்டது திருக்கைலாயமென்னும் பதமாம்.

இவ்வாறு கூறிய லக்ஷணங்களோடு கூடிய கைலாய மென்பது பிரம பதமேயாகும். வைஷ்ணவர்கள் கூறும் ஸ்ரீ வைகுண்ட பதமுமிதுவே. ஆனால், விஷயந் தெரியாத அற்ப அறிவுடையவர்கள் வைகுண்ட கைலாயமென்பது ஓர் உருவ ஸ்தலமென்றும் அது இவ்வுலக எல்லைக்குட் பட்டிருக்கிற தென்றும், கூறுவர் இது நிற்க,

முற்கூறும் **அந்தணர் தம் சிந்தையானை** என்ற பதத்திற்குத் தாத்பரியங் கூறுவாம்.

பிராமணர்கள் மனத்திலிருக்கப்பட்டவனென்பது இப்பதத்திற்கு அர்த்தம் பொருந்துமெனிலோ, சூத்திரர்கள் மற்றையோர் மனதில்லையோ வென்ற சங்கையுண்டாகும். அதற்குச் சமாதானங் கூறுவதும், நமது ஹிந்து மதத்தின் பெரிய நூல்களில் பிரம தத்துவத்தையறிந்தவன் பிராமண னென்று சொல்லும், மற்றை இச்சகத்திற் றோற்றக்கூடிய ஆசார சீல முடைய முப்புரி நூல் மார்பின் வடிவர்களிருக்கின்றார்களே அவர்களைப் பிராமணர்கள் என்று கூறலாமோ வெனில்,

கூறுதல் கூடாதேனெனில், சிகை வைத்துக் கொண்டிருப்ப தால் பிராமணர்களென்றால் நீசர்களும் சிகை வைத்திருக்

கிறார்கள். யக்ஞோபவீதம் தரித்துக் கொள்வதால் பிராமணர் களெனிலோ கோமுட்டியும் வணிகனும் பிராமணனாதல் வேண்டும். வேதங் கற்றிருப்பதால் பிராமணர்களென்றாலோ அன்னிய நாட்டிற் ஜனித்த மாக்ஸ் முல்லர் மாடம்பிளவெட்ஸ்கி முதலானவர்களும் வேதங்கற்றிருக்கிறார்கள். இவ்வகை நியாயங்களால் இவர்களைப் பிராமணரென்பது என் மனதொவ்வவில்லை. பின் இவர்களையும் உலகத்தில் பிராமணர்கள் என்ற பட்டமிட்டழைக்கின்றார்களே யெனில், அதுவும் பொருந்துகிறது. ஒரு பிராமணனை அழைத்து நீயா ரென்றால் சாஸ்திரிகளென்பான் கொஞ்சம் சாஸ்திரம் சொல் பார்ப்போமென்றால் எங்களது ஏழாவது பாட்டனுக்குத் தான் தெரியுமென்பான். அப்படியிருக்க வுனக்கேன் சாஸ்திரிகள் பட்டம் வந்ததென்று கேட்போமானால் சாஸ்திரிகள் பரம்பரை ரயிற் ஜனிக்கக்கூடிய சகலருக்கும் சாஸ்திரிகள் பட்டம் வைத்தழைக்கிறது வழக்கமென்று கூறுவான்.

ஒரு இராஜ்யத்தை ஓரரசனாண்டு வந்தான் அவ்வரசனி ருக்கும்போதே இராஜ்யமவனை விட்டு நீங்கிவிட்டது. ஆனாலும் அவனது வம்சத்திற் பிறக்கக்கூடிய எல்லாருக்கும் அரசன் என்ற பட்டம் போய் விடுகிறதில்லை.

பின்னும், பிரகலாதன் பெரிய குணவான்; அரிய ஞானி. சற்சங்க சகவாசம் முதலிய குணங்களமைந்திருந்தும் அவனுடைய பிதா அசுரனாகையால் அவனையும் அசுரனென் கிறார்கள். இவ்வித திருஷ்டாந்தங்களைப் போலத்தாஷ்டாந்தத் திலும் ஆதியில் பரத்துவாசர், அத்திரி கௌண்டுண்யர் வாதுலர் விஸ்வாமித்திரர் கௌசிகர் பரசுராமர் காசிபர் வியாசர் முதலிய மஹரிஷிகளது கோத்திரத்தில் அதாவது வமிசத்தில் ஜனித்தவர்கள் பிராமணர்களாம். இம்மஹரிஷிகள் பிரஹ்மத்தை யறிந்த பிராமணர்களாகையால் அவர்கள் கோத்திரத்தில் ஜனித்த எல்லோருக்கும் பிராமணர்களென்ற பட்டம்

பொருந்தலாம். ஞானி அஞ்ஞானி இருவருடைய மனதிலும் பரமான்மா நிறைந்திருக்க **அந்தணர் தம் சிந்தை யானை** என்றது ஞானியான அந்தணனிடத்தில் பரமாத்மா அபரோக்ஷ மாயிற் றென்றர்த்தம். எதுபோலெனில், எல்லோருடைய கிரகத்திலும் எதேஷ்டமான திரவியப் புதையலிருக்கின்றன. அவற்றைச் சிலர்கள் கண்டுபிடித்து எடுத்து உபயோகிக் கிறார்கள். மற்றையோர்க்குப் புதையிலிருக்கும் ஞாபகமே கிடையாது. ஆனாலிரண்டு பேரிடத்திலும் புதையலுண்டு என்பது வாஸ்தவமானாலும் எடுத்துபயோகித்தது வெளிக்குத் தோற்றுகிற படியால் பார்ப்பவர்களுக்கு இன்னிடத்தில் இன்னாரிடம் புதையலிருந்தது எடுத்தானென்பார்கள். புதையலெடுக்காதவர் வீட்டில் புதையலிருந்தும் எடுத்து உபயோகிக்காததாலில்லை யென்றே சொல்வர்கள். இதுபோல, ஞானி அஞ்ஞானி இருவரகத்திலும் பரம்பரம் சமமாக இருந்தும் ஞானி கண்டு கொண்டனுபவித்தவனாதலால் அவனை அந்தணனென்பார்கள். ஆனபடியால் அப்பர் ஸ்வாமிகள் அவ்விடத்தில் அப் பதங்கூறியது பொருந்தும்.

மற்றும் தாயுமானவர் **கருவி கரணங்களோய்ந்த தொண்டர்களிடத்தில் நீ வீற்றிருப்ப தென்பதற்குப் பொருள்.**

பிராணன், இந்திரியம், மனது, அஞ்ஞானம், ஜீவன், பிரகிருதி முதலிய மாயாதத்துவங்களைக் குருவினனுக்கிரஹ ஞானானுபவ சமாதியக்னியாலோயச் செய்து இவற்றையில்லா மலாக்கித் தானே நிலைத்தவரிடத்துப் பரவஸ்து வீற்றிருக் மெனத் தாத்பர்யமாம். மற்றையோரிடத்திலில்லையோ வென்றால் அவர்களிடம் வஸ்துவின் சொரூபமிருந்தும் அவர்கள் காணாததால் இல்லையென்றே சொல்லலாம். இவ்வாற்றாற் றாயுமானவர் கூறியதும் நமக்கும் பூர்ண சம்மதமு மான்றோரபிப்பிராயமுமாம். இதுவரை உள்ள மென்னும் பதத்துடன் விருத்தியுரை முடிவு பெற்றது.

4. கடாகாயம் மடாகாயம் கூபாகாயம் பூதாகாயம் மஹா காயம் ஜீவாகாயம் ஈஸாகாயம் சிதாகாயம் சின்மாத்ரா காயம் சூன்யாகாயம் தகராகாயம் ஜலாகாயம் மேகா காயம் மேகஜலப் பிரதிபிம்பாகாயம் கடஜலப் பிரதிபிம்பா காயம் சேதனாகாயம், அசேதனாகாயம், அவிச்சின்ன சேதனாகாயம் சம்பந்த அவிச்சின்னாகாயம் முதலிய ஆகாயங்களில் ஜீவாகாய மாத்திரமான அவஸ்தையின் முடிவைக் கூறுவாம். அதாவது, ஜீவ நிரூபணஞ் செய்வாம்.

ஓர் அழுக்குடன் கூடிய கண்ணாடி அக்கண்ணாடியைப் பார்ப்பவனொருவன் கண்ணாடியும் பார்ப்பவனுஞ் சம்பந்திக்கக் கண்ணாடிக்குள் ஓர் பிரதிபிம்ப முண்டாகிறது. அந்தப்பிரதி பிம்பமுண்டாவதற்குக் கண்ணாடியும் பார்ப்பவனும் வேண்டியதவசியம்போல, இங்கும் அவித்தையென்பது கண்ணாடி அதற்கு இராஜசம் அழுக்கு மலம் பந்தம் முதலிய நாமங்களுண்டு. அக்கண்ணாடியைக் கூடஸ்தன் பார்க்க அதனுள்ளோர் பிரதிபிம்ப முண்டாகிறது. அதாவது, அவித்தை கூடஸ்தன் இரண்டுஞ் சம்பந்தித்த பிரதிபிம்பம். இம்மூன்றுஞ் சேர்ந்ததே ஜீவனென்பர். இதில் அவித்தை நசித்தாலும் கூடஸ்தன் தன் விலகினாலும் ஜீவனென்பனில்லாதவனாகிறான் இனிக் கூடஸ்த லக்ஷணங் கூறுவாம்.

கூடம் என்பது ரகஸ்யம் என்பது பொருள் படும். அஸ்தன் இருக்கப்பட்டவன். அதாவது இரகசியமாக இருக்கப்பட்டவ னென்பது பொருந்தும். அல்லது வளைபட்டதென்பதும் பொருந்துகிறது. முதலிற் கூறிய இரகசிய லக்ஷணமெப்படிப் பட்டதென்றால் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி சூன்யம் பிரகிருதி மாயை முதலிய அவஸ்தைகள் தாண்டிய இடத்தில் துரியத்துக் குங் கீழான அவஸ்தையிலிருக்கப்பட்டவனாதலால் கூடஸ்தன் என்னும் பதத்திற்கு இவ்வர்த்தம் பொருந்தும். அந்தக்

கரணத்தாலும் மற்றுமுள்ள தத்துவங்களாலும் சூழ்ந்திருக்கப் பட்டவனாதலால் வளை பட்டவனென்பதும் பொருந்தும். இனி ஈஸ்வர லக்ஷணங் கூறுவாம்.

மேற்கூறிய கண்ணாடி பார்ப்பவன் சாயல் இம்மூன்றுங் கூறியதுபோல இங்கே மாயை கண்ணாடி பிரமம் பார்ப்பது இரண்டுஞ் சேர சாயலுண்டாகிறது. இம்மூன்றுஞ் சேர்ந்ததே ஈஸ்வரன். ஜீவேஸ்வர கூடஸ்த லக்ஷண பேதமிதுவாம். இம் மூன்றின் லக்ஷணங்களுந் தாண்டிய அவஸ்தையே துரியம் அதற்கப்பாலுள்ளதே அதீதம் ஆங்கிருப்பதுவே பரம் இவ்வாறு ஜீவசாக்ஷியென்னும் பதத்துடன் விருத்தியுரை முற்றுப் பெற்றது.

5. 3 அவஸ்தைகள். 3 சரீரங்கள். 5 கோசங்கள். 8 குணங்கள். 6 விகாரங்கள். 96 தத்துவங்கள். 64 கலைகள். 8 ஆனந்தங்கள். 9 விஷயங்கள். 64 யோகங்கள். 12 ஞானம். 800 கருமங்கள். 300 பக்தி. 224 லோகங்கள். 1008 அண்டங்கள். 4000 பிரமாணங்கள். 14 ஜகத் பிரிவுகள் 80 அதிகாரர்கள். அளவில்லாத மனுக்கள் எண்ணிறந்த ரிஷிகள் 3 கர்த்தாக்கள். இவைகளையெல் லாங் கடந்த கோளம் ஒன்று. அஞ்ஞான பூமி ஏழு ஞான பூமி ஏழு. 8 முகூர்த்தம் இவைகளையெல்லாங் கடந்த அவஸ்தையுங் கடந்தோம் என்னுமிடத்தையுந் தாண்டிப் பற்றற்று அங்குள்ள வாதனாவடிவப்பசையுமற்று நின்ற முடிவே துரியாதீதமென்பர். அதற்கே தானே தானாய்த் தனித்த விடம் நானே நானாய் நின்றவிடம் அவனே அவனாய் அமர்ந்த இடம் அபேதஸ்தான பூமி. அகண்ட சச்சிதானந்த ஸ்தலம் நிர்க்குணானந்த இடம் அவாங்மனோவகோர விடம். அபரோக்ஷ ஞானபூமி அவ்யக்த சொப்பிரகாச வஸ்து இடம் இன்னும் மஹான்களாற் கூறப்படுகிற நாமம் அவற்றிற்குப்பலவுள. அவற்றின் லக்ஷணங்களை விரிக்கிற் பெருக்குமெனச்

சங்கிரகமாக்கினோம். இதுவரை மாத்திரமாய் நிற்கும் பதம்வரை விருத்தியுரை ஒருவாறு முடிந்தன.

6. இச்சகத்திலுள்ள சமஸ்த ஞான அஞ்ஞான விவரண வியக்த அவ்யக்த தக்ஷண விலக்ஷண பூமிகளும் அதை யுந் தாண்டிய அஞ்ஞான பூமிகள் ஏழிலும் மேலான ஞாபூமிகள் ஏழாகும். அவையாவன, 1. சுபேங்சை 2. விசாரணை 3. தனுமானசி 4. சத்துவாபத்தி 5. அசம்சத்தி 6. பதார்த்தபாவனை 7. துரியம் இவைகளாம்.

இவற்றில் முதற்பூமியாகிய சுபேச்சையினது வர்ணனை இங்கு கூறவாம்.

1. கெம்பீரமான காரியங்களில் நாடோறு முயற்சி செய்து அவ்விஷய லாபத்தால் எப்போதுஞ் சுத்த நினைப்பையே நினைத்தல்.

2. அப்படிச் செய்யுங் காரியங்களை டம்ப நிமித்தமாக வெளியிற் கூறாதிருத்தல்.

3. அசுபச் செய்கைகளுக்கு மிகவும் பயப்படுதல்.

4. உலகத்தார் கண்டு பயப்படாத மிருதுவான கருமங்களைச் செய்தல்

5. உலகத்தாரைக் கண்டும் பயமடையாதிருத்தல்.

6. அதிகமாக உலக காரியங்களிற் பிரவேசியாதிருத்தல்.

7. செய்யுங் கருமங்களைப் பற்றற்றுச் செய்தல்.

8. மூவித காரணத்தால் பெரியோரைப் பின்பற்றல்.

9. உலக விஷய போக இச்சை மாற்றுதல்.

10. மிகுந்த நயம் பயம் மிருது கெம்பீரம் இடம் காலம் தேசம் நாள் கருமம் இவைகள் கூடிய சமுதாயப்படி பேசுதல்.

11. மேலான ஞானானுபவ கிரந்தங்களை எங்குஞ் சென்று தீவிர இச்சையுடன் அப்பியாசித்தல்.

12. நான்கு சாதனமு நிறைந்து அதிதீவிர தரமான மோக்ஷ இச்சையுடனிருத்தல்.

இத்தகைய அபாரமான சாதனங்களொருங்கே யமைந்த ஓரிடதிற்கே சுபேச்சை யென்பர்.

1. வேதம் சாஸ்திரம் ஸ்மிருதி முதலியவைகளிற் கூறியபடி யனுஷ்டித்தல்.

2. நல்லொழுக்கம் மனதடக்கம் சொரூபத் தியானம் ஓங்கார நிஷ்டை இவைகளை அனுஷ்டித்தல்.

3. ஞான விஷய சந்தேகங்களை மஹான்களிடஞ் சென்று கேட்டல்.

4. பிரம நிஷ்டாபரர்களிடஞ் சென்று ருக் வேதத்தின் ஐகத்ரேய உபநிடத்திற் கூறும் பிரக்ஞானம் பிரமம் யசுர் வேதத்தின் பிரகதாரண்ய உபநிடதத்திற் கூறும் அகம் பிரமாஸ்மி சாம வேதத்தின் சாந்தோக்கிய வுபநிடதத்திற் கூறும் தத்துவமசி அதர்வண வேதத்தின் மாண்டூக்ய வுபநிடதத்திற் கூறும் அயமாத்மா பிரமம் இவ்வாக்கியங்களில் முதல் வாக்கியம் அனுபவம். இரண்டாம் வாக்கியம் அப்பியாசம் மூன்றாம் வாக்கியம் உபதேசம் நான்காம் வாக்கியம் ஆரூடம், இதில் மூன்றாவதான தத்துவமஸி வாக்கிய மூன்று பதங்ளிருக்கின்றன.

அவையாவது, தத்பதம் துவம்பதம் அஸிபதம் இம்மூன்றாம்.

இவற்றில், தத்பதவாச்சியார்த்தம் ஈஸ்வரன், தத்பத லக்ஷியார்த்தம் பிரஹ்மம். துவம்பத வாச்சியாரத்தம் ஜீவன் துவம்பத லக்ஷியார்த்தம் கூடஸ்தன். அசிபத வாச்சியலக்ஷியம்

கூடஸ்தப் பிரஹ்ம ஐக்கியமேயாம். இவற்றை ஆதியில் உத்தாலகர், சுவேத கேதுவுக்கும் வசிஷ்டர் ஸ்ரீ ராமனுக்கும் ஸ்ரீ கிருஷ்ண பகவான் காண்டீபனுக்கும் நம்மாழ்வார் மதுர கவியாழ்வாருக்கும் மைத்திரேயர் மைத்திரிக்கும் ஜனக ராஜா சுகருக்கும் சீதா தேவி ஆஞ்சநேயனுக்கும் உபதேசித்ததாகப் பெரிய கிரந்தங்களிற் கூறப்பட்டிருக்கிறது. பின்னும், மேற்கூறிய தத்பத துவம்பத அசிபத ஐக்கிய இரகசியங்களைப் பெரியோர்கள் முன்னிலையில் தெரிந்து கொண்டு இன்ன காரியஞ் செய்ய வேண்டியது இன்ன காரியஞ் செய்யக் கூடாதது என்று தெரிந்து கொள்ளுதல்.

5. மதம் மச்சரம் அபிமானம் லோபம் டம்பம் முதலியவைகளைச் சிறிதாக விட்டு விடுதல்.

6. சாஸ்திரங்களாலும் மஹான்களாலுங் கொண்டாடப் படுதல்.

7. குரு மஹானவர்களால் அதிரகசியப் பொருள்களைத் தெரிதல் இவ்வளவும் பொருந்தியதே விசாரணையென்னு மிரண்டாம் பூமி லக்ஷணமாம்.

1. எதார்த்தமான அனுபூதி சாஸ்திர அர்த்தங்களையும் குருவுபதேசத்தையு மனுஷ்டித்துச் சதாகாலமும் பிரஹ்ம நிஷ்டாபரர்களாகிய மஹான்களிடஞ் சென்று ஞான ரகஸ்யங் களையும் சமாதி அப்பியாசக் கிரமங்களையும் முடிவாக வுணருதல்.

2. வசிப்பதற்கும் இருப்பதற்கும் விஸ்தாரமனா வனாந்தரங்ளில் கற்பாறையிருக்கின்ற பெரிய குகைகளிலே வசித்தல்.

3. சுகதுக்க சமத்துவ பாவனை அஞ்ஞானிகளைக் கண்டாலோடுதல்.

4. சவிகற்ப சமாதியின் முடிவைக் காண்குதல்.

5. அனுபவ நூலாராய்ச்சியினாலும் அப்பியாச பலத் தாலும் பூர்வபுண்ணிய பரிபக்குவ கால நியதியினாலும் ஆத்ம தரிசன முண்டாகுதல்.

6. சதா நிஷ்டையிலிருக்க இச்சை கொள்ளுதல்.

இவைகளை யெல்லாமுடைய பூமியே மூன்றாவதான தனுமானசியாம்.

இம்மூன்று பூமி யப்பியாச பலத்தால் மனமிறந்த அதீத முடிவின் சகச நிஷ்டையின் ஜீவன் முக்தி வடிவப் பிரஹ்ம வித்தென்னும் நான்காம் பூமியான ஸத்துவா பத்தியாம்.

பிரபஞ்சத் தோற்றமில்லாத பிரமநிஷ்டையினவதியே அஸம் சத்தியென்னு மைந்தாம் பூமியாம்.

அதுவுமறந்த பிரஹ்ம சாக்ஷாத்கார ஆயுள் வடிவ பிரஹ்ம சொரூப நிஷ்டாலயமே பதார்த்த பாவனையென்னும் ஆறாம் பூமியாம்.

இவ்வாறு பூமியுங் கடந்த துரியாதீத அவஸ்தையே ஏழாவது பூமியென்னுந் துரியமென்னும் வரிட்டபதமாம்.

ஆக இவ்வேழு பூமிகளின் லக்ஷணம் முடிந்தன.

முதலில் சுபேச்சை விசாரணை தனுமானசி என்ற மூன்று பூமிகளையும் அதிகமாக விஸ்தரித்தும் பின் ஸத்துவாபத்தி அஸம்சத்தி பதார்த்த பாவனை துரியம் என்னுமின்னான்கையும் சுருக்கமாகக் கூறியதெதனாலெனில், முதல் மூன்று பூமி அப்பியாசமும் மற்று நான்கு மாரூடபூமிகளுமாம். முதல் மூன்று பூமியிலுள்ளோர்க்கு உலகம் ஜாக்கிரமாயும் அதாவது நித்திய மாயும் நான்காம் பூமியான சத்துவா பத்தியுடையோர்க்கு

உலகம் சொப்பனமாயும் மற்றை ஐந்தாறேழு பூமிகளி லுள்ளோர்க்கு உலகம் சுழுத்தியாயுந் தோற்றும் முதல் மூன்று பூமியுடையோர்க்கு மனதில் பேத புத்தி தோற்றுவதால் அவர்களனுஷ்டிக்க வேண்டிய கிரமங்களை விஸ்தாரமாகக் கூற வேண்டியதவசியமாயிற்று. மற்றைய நான்கு பூமியுடை யோர்க்கு மனதில் கர்த்திருத்வபோக்த்ருத்வ அந்தக்கரண வுபாதியற்ற அபேத புத்தியுடனிருப்பதால் அன்னோர்கட்கு விதி நிஷேத பூர்வக சுருதிகளும் நேமமுங் கிடையாதாகையால் அன்னோர்கள் பூமி லக்ஷணத்தை சங்கிரகமாகக் கூறினோம். இவ்வாறு எழுநிலம் என்னும் பதம் வரை முடிவு பெற்றது.

இவ்விதமான ஏழுவித ஞான பூமிகட்கும் அவற்றின் பிரயோஜனங்கட்கும் அதீதமாயிருக்கப்பட்ட மனோவாக்குக் கெட்டாத துரியாதீத மென்னுமகண்ட வடிவ சைதன்ய நிலத்திற் பொருந்தியிருக்கப்பட்ட அத்வைத சொரூபனான பரமாத்ம வஸ்துவினது சீர்பாதங்களை இரண்டறந் துதிப்பாம். இவற்றி லெனக்கோர் சந்தேகந் தோற்றுகிறது. ஞானபூமியேழையுங் கடந்த துரியாதீத பூமிக்கு நன்னிலமென்று இன்னூலாசிரியர் கூறாநின்றார். அப்படியாகில் அத்துரியாதீதத்துக்கு எதிரிடையான கெட்ட நிலமொன்றுண்டாக வேண்டுமே அதற்குச் சமாதானங் கூறுதும். வாக்கு மாத்திரமாகத் தெரியப் பரமாத்ம வஸ்துவைப் பேச வேண்டுமானால் நல்லது கெட்டது ஏதாவதோர் மார்க்கமாகத்தான் பேச வேண்டிவரும், இதனாலென்ன தெரிகிறதென்றால் நல்லது கெட்டதில்லாத ஆத்மாவிடத்திலே நிலைத்து ஒன்றும் பேசாமலிருப்பதே உத்தமமாகும். ஆன்ம நிலையினின்று வாக்கு மனது இவை களுண்டாகுமாயின் அளவிறந்த ஜென்மம் வந்து விடும். ஆதலால், நாம ரூபமற்ற வஸ்துவிடத்தில் நிலைத்தல் வேண்டும். பின்னும் ஏகநாயகனென்றால் துவைத நாயகன் ஒருவனிருப்பானோ வென்ற சங்கையுண்டாகும். எப்பொழுது பேச்சுண்டாயிற்றோ அப்பொழுதே எழுபத்திரண்டு மாறுபாடு

களுண்டாகும். சங்கற்பமின்றிய வஸ்துவிடத்தே ஓர் நினைப் புண்டாகி அதினின்று பல சக்திகளுண்டாகி அதினின்று குண விகாரங்களுண்டாகி அதினிடமீஸ்வரனுண்டாகி மஹரிஷி களுண்டாகி பிரபஞ்சமுண்டாகி வேதாந்தமுண்டாகி வேத முண்டாகி அதனப்பால் தாண்டவராய ஸ்வாமிகளுண்டாகி அவரிடத்துண்டாகிய இக்கைவல்ய நவநீதமென்றால் ஆதி வஸ்துவில் ஓர் நினைப்புண்டான போதே துவைதம் வந்து விட்டது. அப்படியிருக்க எத்தனையோபடி யிறங்கிய பின்னுடாகிய இக்கைவல்ய நவநீதத்தின் முதற் கவியிலுள்ள நான்காமடியில் ஏற்பட்ட ஏகநாயகன் என்பதற்குத் துவைத நாயகன் என்கிற சங்கையுண்டாகுமென்பதற்குக் கேட்கவா வேண்டும், ஆதலாலேக நாயகனென்பது அதிஷ்டான வடிவ லக்ஷியமாக இவ்வர்த்தம் பொருந்தும். பதங்கள் போற்றி என்றதால் பரமாத்மாவுக்குப் பதங்களேதுவென்றால் அவ் வஸ்துவிற்கு மூன்று பதங்களிருக்கின்றன. அவையாவன, சத்துசித்து ஆனந்தம் இவைகளாம். இவ்வித பதங்கள் போற்றி யென்பது பொருந்தும். இவ்விதமாக முதற் கவிக்கு விருத்தியுரை ஒருவாறு சங்கிரகமாக முடிவு பெற்றது.

ஓம் தத் ஸத்

ஓம்
தத் ஸத்

ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள்
அருளிச் செய்த

# தங்கவேலை
# தட்டா வேலை
# நகாஸ் வேலை

இஃது
கரூர் மண்டி,
மு.ஆ. வெங்கட்டறும செட்டியார்
அவர்களால்

1926

ஓம் தத் ஸத்

## தங்கவேலை

சகோதரர்களே,

அவரவர் கர்மானுசார ஈஸ்வர நியதிப்படி பிரபஞ்சத்திற் ஜனித்த நாமெல்லோரும் முதலிற் செய்ய வேண்டியதென்ன வென்றால்,

## தங்க வேலை தான்

ஏனெனில், தங்கள் தங்கள் வேலைகளைச செய்து முடிக்காதவன் மற்றெவ்வேலைகளைச் செய்து முடிக்க வல்லவனாவான். ஆதலால் நாமனைவரும் முதலில் தங்கவேலை இன்னதென்று தேடி விசாரித்துக் கண்டு அனுஷ்டித்து அனுபவித்து ஆரூடமாக்கி அடைய வேண்டியதற்குச் சாதகமான விஷயங்களைக் குறைவற அனுஷ்டித்து நடக்கவேண்டும்.

அதாவது : ஆசாரிமார்கள் தங்கவேலை செய்ய ஆரம்பித்துத் தகதகவென்று மின்னக்கூடிய மாற்றுத் தங்கத்தை வாங்கிப் பட்டரையில் உருக்கி உறைத்து நருக்கி நிருத்து இருக்கி பெருக்கி அறுத்து நீட்டி மடக்கி சமப்படுததி காப்பு, ஜடபில்லை, நாகர், குண்டலம், மோதிரம், ஒட்டியாணம், காசுமாலை, அரைஞாள், தோடு முதலிய அருமையான நகைகள் செய்து விடுகிறார்கள்.

அதுபோல நாமுமம் நமது ஆசாரியர்களான தக்ஷிணாமூர்த்தி, ஜனகாதி மஹரிஷிகள், வசிஷ்டர், வியாசர், நம்மாழ்வர் ஞான சம்பந்தர், சங்கரர், மத்துவர், இராமானுஜர் முதலியவர்களிடம் மாற்றில்லாத் தங்கத்தை வாங்கி மாற்றாமலப்படியே நிறுத்து முதலில் காப்புச் செய்ய வேண்டும்.

## காப்பு

கணபதி காப்பு, பிரம விஷ்ணு ருத்ர மகேஸ்வர சதாசிவ சுப்பிரமண்யர் முதலியோர்கள் காப்பு ஞானிகள், அடியார்கள் காப்பு, இவைகளை மிக நாகரீகமாகச் செய்து தனது அந்தரங்கக் கைகளில் அணிந்து கொள்ள வேண்டும். அதன் பின் ஜடபில்லை செய்தல் கூடும்.

## ஜடபில்லை

ஜடம் என்பது சரீரம். அதாவது ஸ்துலம், சூக்ஷ்மம், காரணம் எனச் சரீரம் மூன்று.

இதில், ஸ்தூலம், பாஞ்ச பௌதிக விகார அன்னமய கோசம்.

சூக்ஷ்மம், சத்துவ ராஜச, பிராண மய, மனோ மய, விஞ்ஞான மய கோசம்.

காரணம், ஆத்திர வடிவ தமோ குண ஆனந்தமய கோசம்.

இம்மூன்று சரீரம் அல்லது ஐந்து கோசம், மூன்றவஸ்தை, முக்குணம். இவற்றுட்பட்டு விழித்திருப்பது ஜீவன். அதனப்பால் பிரகிருதி. அப்புறம் சூனியம். அப்பால் ஞானம். அதனப்புறம் திருபுடி. அதனினுமப்பால் அப்பியாசம். அதன்பின் அனுபவம். அதுவுங் கடந்ததே உள்ளுணர்வு. அப்புறந்தான் சாக்ஷாத்காரம். அதாவது ஆருடம், பிரம்மம், தெய்வம், கடவுள், சிவம், வாசதேவம் என்பது. இவற்றில் கடவுளை நோக்கங்கால் அனுபவாருடம், ஜடம். அனுபவாருடத்தை நோக்குமிடத்து உள்ளுணர்வு ஜடம். உள்ளுணர்வை நோக்குங்கால் அப்யாஸம் ஜடம். அபயாசத்தைப் பார்க்கும்போது ஞானம் ஜடம். ஞானத்தை பார்க்குமிடத்து திருபுடி ஜடம். திருபுடியை ஆராயில்

சூனயம் ஜடம். பிரகிருதியைப் பார்ப்போமானால் ஜீவன் ஜடம். ஜீவனை நோக்குமிடத்து காரணம் ஜடம். காரணத்தைப் பார்க்குங்கால் சூக்ஷமம், சூக்ஷமத்தைக் காட்டிலும் ஸ்தூலம் ஜடம். ஸ்தூலத்தை நோக்குங்கால் பிரபஞ்சம் ஜடம்.

இவ்வாறு ஜட நிரூபணம் சொல்லப்பட்டன. இவற்றின் பில்லையைத் தாங்கியருப்பவர் பரமேஸ்வரன். அச்சட தாங்கியான பரமேஸ்வரனது சொரூபத்தை உள்ளவாறு தாங்கியிருப்பதே ஜடபில்லை செய்து தரித்துக் கொள்வதாகும். இனி நாகர் செய்ய ஆரம்பிக்கலாம்.

## நாகர்

நாகன் என்பது ஆதிசேஷன். அதாவது சர்வ தத்துவங்களையுந் தள்ளிச் சேடித்திருப்பதே சேஷம் என்று பொருள். அவற்றை அடைய விரும்பி சரீரம், இந்திரியம், பிராணன், மனது, புத்தி, அஞ்ஞானம், மாயை, மூலப்பிரகிருதி, மதம், அகங்காரம், மகத்துவம், ஜீவன், ஈஸ்வரன் முதலிய தத்துவங்களை நியதி செய்து அதனப்பாற் சேஷமான பரப்பிரஹ்ம ஐக்கியமடைதலே நாகர் செய்து அணிதலாகும். இனி குண்டலஞ் செய்ய ஆரம்பிக்கலாம்.

## குண்டலம்

குண்டலியென்பது மூலாதாரத்தின் நடு மத்தியிலுள்ள ஓர் பிரமாதமான மயக்க சக்தி. அச்சக்தியை அறிய விரும்பி இதைச் செய்து நாமணிவதே குண்டலம் செய்தணிவதென்பார். அதாவது இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியா காரம், தாரணை, தியானம், சமாதி இவ்வெட்டு யோகங்களை யும் முறையே யதார்த்த குரு மஹானவர் முன்னிலையிலுப தேசித்துக் கொண்டு ஏகாந்த ஸ்தலத்தையடைந்து ஆகாரஞ் சுருக்கி ஆசனங்கட்டி உத்தரமுகமாய் நிமிர்ந்து பிரணவ

சப்தத்துடன் அ [illegible] சித்து நான்காவது பிராணாயாமம் முடிந்த பின் பிரத்தியாகார சமயம் உதிப்பது குண்டலினியாம். அக் குண்டலினி வெளித் தோன்றுமபோது மிகுந்த பசியுண்டாகும். அதிகமான உடல் வளைவு தோன்றும். அடிக்கடி பெருமூச்சு விடும். சகல இந்திரியங்களும் நடுங்கும். மனம் பதரும். ஜீவனிமிரும். இன்னும் பலவிதமான குறிகளுண்டாகும். இவைகளையெல்லாம் தனது தீர மனதிடத்தால் ஜெயித்து அதனப்பால் குண்டலினியைத் தன்வசப்படுத்தி அணிந்து கொள்ளுவதாகும். இதன் பின் மோதிரம் செய்ய ஆரம்பிக்க வேண்டும்.

## மோதிரம்

சர்வ தத்துவங்களையும் தனது திடத்தினால் மோதி நிலைக்காமலாக்கித் துரத்தித் தனது திரத்தைக் காட்டி அதையே நாட்டடி தன்னைக்கூட்டி தனது சுபாவ வீட்டிலிருந்து கொண்டு சர்வமத தத்துவ மோதிரத்தை அணிவதே மோதிரம் செய்தணிவ தாகும். பின் ஒட்டியாணஞ் செய்ய ஆரம்பிக்க வேண்டும்.

## ஒட்டியாணம்

சமாதி அப்பியாசம் ஆரம்பிக்கும்போது மனது வசப்படு வதற்குச் சாதகமான பந்தங்கள் பலவுள்ளன. அவற்றில் ஒட்டி யாண பந்தகமென்றொன்றுண்டு. அதாவது நாசியின் உச்சியின் முடிவான சுழுமுனையில் மனதையிருத்தி அப்பியாசிக்க முடி வில் விளங்கும் அனுபவத்தைப் பந்திப்பதையே ஒட்டியாண பந்தகமென்பர். இனி காசு மாலை செய்ய வேண்டும்.

## காசு மாலை

காசு என்பது செல்வம். அதன் மால் என்பது அதாவது உலக விஷயமான செல்வம் முதலிய மயக்கங்களை அணி

யணியாகக் கோர்த்துத் தனது சுவானுபவக் கழுத்திலணிந்து கொள்ளுவதாகும். இக்காசமாலை செய்பவர்களுக்குக் கூலி ரூபாய் ஏழு. அதாவது சுபேச்சை, விசாரணை, தனுமானசி சத்துவாபத்தி, அசம், சத்தி, பதார்த்த பாவனை, துரியம் என்னும் இவ்வேழு ரூபாய்களாம். இதன்பின் அரைஞாள் செய்தல் நன்று.

## அரைஞாள்

அரை நாள், கால் நாள், முக்கால் நாள், முழு நாள் முதலிய நாள்கள். இன்னும் பல இருக்கின்றன. அதாவது, சப்தானுவித்த சமாதி கால் நாள். சப்தானுவித்த சமாதி அரை நாள். அத்வைதபாவனாரூப நிருவிகற்ப சமாதி முக்கால் நாள். அவஸ்தானுரூப நிருவிகற்ப சமாதி அல்லது அஸம்பிரக்ஞாத சமாதி முழு நாள்.

சகஸ நிஷ்டையே பூரண நாள். இவற்றின் பிரிவுகளை இங்கு எழுதப்படவில்லை. இது செய்து முடிந்தபின் தோடு செய்ய ஆரம்பிப்பது நலம்.

## தோடு

தோடு செய்பவர்கள் நயமான வெள்ளை, சிகப்பு முதலிய வஜ்ர, வைடூரிய, புஷ்பறாக, கோமேதக, சிகப்பு முதலிய இரத்தினங்களை பதித்து ஸ்திரப்படுத்தித் தங்கத்திலாக்கித் தனது காதிலணிந்து கொள்ளுகிறதுபோல இங்கும் சாத்வீக கண விலக்ஷண சமுதாய வெள்ளைக் கற்களையும், இராஜச குண சிகப்புக் கற்களையும், நிருவிகற்பத்தால் ஸ்திரப்படுத்தி சகச நிஷ்டையென்னுந் தங்கத்திலாக்கி அனுபவக் காதுகளி லணிவது என்பதொரு பக்ஷம். பின்னும் தோடு என்பது உண்மையை மூடிக் கொண்டிருக்கும் ஓர் விதப் பொய் என்பது பொருந்தும். அவையாவது, பருப்பை மூடியிருக்கும் சிரட்டை,

சரீரத்தை மூடியிருக்கும் உடுப்புகள், உயிரை மறைத்துக் கொண்டிருக்கும் உடல் இவைகளைபோல யதார்த்த வடிவ ஆன்மாவியிருக்கப்பட்ட தன்னுடைய சொரூபத்தை மறைத்திருக்கின்றது. அதை யுணர்ந்து ஆன்மாவாகி நின்று கொண்ட பின்னும் சரீர வடிவ மறைப்பைத் தாங்கிக் கொண்டிருப்பதென்பதாம்.

இவ்வித மஹா அதியற்புதமான தங்க வேலைகளை யெல்லாம் உண்மையான ஆசாரியரிடம் கேட்டுத் தெரிந்து அனுஷ்டித்து அடைதல் வேண்டும். இனித் தட்டாவேலை கூறுவாம்.

## தட்டா வேலை

பிரபஞ்சத்திலுட்பட்ட எவ்வித பெரிய அரிய காரியங் களாலும் இடையிற்றடைபட்டுப் போகின்றன. யாதொரு தடையி மன்றிச் செய்யப்படுங் காரியமெதுவோ அதுவே தட்டா வேலை யாம். நாம் செய்கிற வேலைகளில் தட்டுகிற வேலையொன்று, தட்டா வேலையொன்று ஆக இரண்டிருக்கிறது. இவற்றில் சூனியமும் அதனப்பாலுள்ள பிரஹ்ம தரிசனத்தில் தடைபடு கின்றன. பிரகிருதியும் அப்பிராகிருத்தில் தடைபடுகிறது. அஞ்ஞானம் ஞானத்திலும் ஞானம் அஞ்ஞானத்திலும் தட்டுப்பட்டுப் போகின்றன. பிரபஞ்சம் பிரளயத்திலும், பிரளயம் உற்பத்தியிலும் தடைபடும். மனதும், இந்திரியமும், பிராணனும், உலகமும், சுழுத்தியில்லாமல் ஆகின்றன. சுழுத்தியும் சாக்கிரத் தில் அழிகிறது. நன்மை தீமையிலும், தீமை நன்மையிலும் இல்லாதாகிறது. இன்பம் துன்பத்திலும், துன்பம் இன்பத்திலும் தட்டுண்டு போகிறது. பின் சர்வமத தெய்வங்களும், தேவர் களும், ஆசாரியர்களும், சக யோகமும், ஞானமும, கர்மமும், பக்தியும், தடைப்பட்டு நின்று விடுகின்றன. பின் எதற்கு மேல் இன்னொன்றில்லையோ, எதை அடைந்தபின் இன்னொன்றை

அடைவதற்கு இடமில்லையோ அவ்வஸ்து ஒன்றுதான் ஒரு விஷயத்திலும் தடைபடுவதில்லவென்று நினைக்கிறேன். அவ்வஸ்து யாதென்று ஆராய்வோம்.

திரிகாலத்திலும் யாராலும் தன்னாலும் தட்டாமலிருப்பது எதுவெனில், சர்வமத ஆதார பூதமானதும், சகல தத்வ சாக்ஷி சொரூபமாகியதும், சர்வபுவனதயாபர வஸ்துவாகியும், சர்வமத தேசகால வஸ்து பரிச்சேதமற்றவராயும், இரா நின்ற யாதொரு பரமாத்மா, அதாவது, கடவுள் என்னுமொரு அவாங்க மனோ கோசர வஸ்துவேயாம். இவ்வித அபாரகருணா நிதியாகிய சர்வ சக்தியுடைய பகவானொருவனே யாதொரு விஷயத்திலுந் தடைபடாதவரென்பது சகல பிரமாணங்களாலும் ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆதலால் பரமாத்மாவை அல்லது கடவுளை அதாவது "பிரஹ்ம சொரூபத்தை" அடைய வேண்டிய சாதனை வேலைகளுக்கும் அடையப் போகுந் தருவாய் வேலை களுக்கும் தட்டா வேலையென்றர்த்தமாகும்.

இவற்றில் முதலில் தங்க வேலைகளை அறிய வேண்டிய வடிவமான தங்க வேலைகளைச் செய்து அதனப்பால் தட்டா வேலை செய்ய ஆரம்பிக்க வேண்டும். ஏனெனில், முதலில் தங்கிய அப்பால் தங்காத இடஞ் சென்று ஒன்றுந் தட்டாத இடஞ் சென்று ஒழுங்குற்ற நிலமடைந்து தட்டாவேலைகளைத் தட்டாமற் செய்ய வேண்டும். இனி, இவ்விரண்டு வேலைகளுக் கும் அவசியமாக வேண்டிய நகாஸ் வேலையைக் கூறுவாம்.

## நகாஸ் வேலை

முதலில் ஓர் அப்பியாசி சமாதியை யதார்த்த சாதன சாத்திய சம்பந்தத்துடன் அப்பியாசித்து அவ்வப்பியாசத்தை முடிவான சகஸ நிஷ்டைக்குக் கொண்டு வருகிறான். அது போல, முதலானது தங்க வேலைகளையெல்லாம் குறைவரச் செய்து அதற்குட்பட்டு அரைவேலை செய்து அதனப்பால் ஊதி,

அதாவது, சுவாஸ பந்தனஞ் செய்து தட்தாமற் செய்யப்படுகிற தட்டா வேலைகளையும் திடமாக முடித்து பின்பு இவ்விரண்டு வேலைகளும் தன்னை விட்டகலாது ஸ்திரப்படும் பொருட்டு நகாஸ் வேலையென்னும் சகஸ நிஷ்டையைப் பழகி நிற்க ஆரம்பித்து ஆத்ம சாக்ஷாத்காரமடைதல் ஸவ்ணடும். அவை உலகம் சரிரம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி, மதம், மமதை, அகங்காரம், அவித்தை, மாயை, முக்கணம், ஞானம், சூன்யம், ஜீவன், ஈஸ்வரன், தெய்வம் என்னும் இப்படிகளை முன்னரே தள்ளிக் கடைசியில் உதயமாகா நின்ற நித்தியானந்த வடிவப் பொருளை அடையப் பழக வேண்டும். அப்படியே நெடுநாள் பழகி ஆத்மானந்தத்தை அடைந்து அதை நிரந்தரமனுபவித்து அதையுமறந்து ஆனந்த அன்பத்தையும் மறந்த நயமான நகாஸ் வேலையை அடிக்கடி மனதிற்கு அல்லது ஜீவனுக்குச் செய்தல் வேண்டும். இவ்விதமாக முறையுடன் மும்முரமாகத் தனது சத்துவ மனதுடன் சகஸ நிஷ்டைக்குச் சார்பான தங்க வேலை, தட்டா வேலை என்ற இவ்விரண்டு வேலைகளையும் அனுஷ்டித்து முடிந்தபின் அவ்விரண்டு வேலைகளுக்கும் நகாஸ் வேலை என்னும் சகஸ நிஷ்டையைப் பழகி மிதமாக முதலிற் செய்து இவற்றின் அந்தரங்க மர்மங்களை உள்ளவாறு உணர்ந்துய்வீர்களென்று கூறியதாகும்.

இவைகளை விரிவாகக் கூறுவதற்கு தற்போது என் மனம் விரியவில்லை யாதலால் இங்ஙனஞ் சுருக்கிக் கூறியதா மெனவறிக.

ஓம் தத் ஸத்



தேவார நகரம் சுத்தாத்வைதி அருட்கவி

**ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள்**